

காண லுறுகின்றேன் கல்லருவி முத்துதிர
ஓண விழவி லொலியதிர—பேணி
வருவேங் கடவா என்னுள்ளம் புகுந்தாய்
திருவேங் கடமதனைச் சென்று.

*ஒலிக்கின்ற அருவிகளின் மூலமாக முத்துக்கள் உதிரப் பெற்றதாய், திருவோணத் திருநாளில் (திருப்பல்லாண்டு பாடுகை வேத பாராயணம் செய்கை ஆடுகை பாடுகை முதலானவற்றாலுண்டான) த்வநி அதிரப் பெற்றதாய் (பக்தர்கள்) விரும்பி வந்து சேரப் பெற்றதான திருவங்கட மலையை இருப்பிடமாக வுடையவனே! நீ என் நெஞ்சிலே புகுந்து விட்டாய்; (நீ திருமலையைவிட்டு என்னுள்ளத்திலே வந்து விட்டாலும்) நான் அத்திருமலையிற் சென்று ஸேவிக்க விருப்பங்கொண்டிருக்கிறேன்.*

*நான்முகன் திருவந்தாதி*—41.

செப்டம்பர் 1987

# ஸப்தகிரி

இதழ் 4 மலர் 18

## உள்ளுறை



சில தவிர்க்க முடியா காரணங்கள் முன்னிட்டு 'சித்திரத் திருப்பாவை' இவ் இதழில் இடம் பெறவில்லை. (ஆ—ர்)

**அட்டைப்பட விளக்கம்**

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோற்சவ புகைப்படக் காட்சிகள்.

*சிறப்பாசிரியர்.*
**திரு. சி.எச். வெங்கடபதிராஜு**
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்*
**திரு. எம். விஜயகுமார் ரெட்டி,**
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர்:*
**திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.**

*துணையாசிரியர்:*
**திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,**

**பிரதிகளுக்கு:**
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

வெள்ளிக் கோப்பையில் பால் அருந்தி, தங்கத் தட்டில் அறுசுவை கொள்ளும் பணக்காரனும், மண் குவளையில் கூழ் குடித்து அலுமினியத் தட்டில் சுவையில்லாச் சோறு உண்ணும் பரம ஏழையும் பிரச்சனை என்ற ஒன்றால் அலைகழிக் கப்படும்போது அவர்கள் நாடும் ஒரே பொருள் 'அமைதி'. இன்றைய விஞ்ஞான உலகில் பொருள் கொடுத்து இளமை யினைக் கூட விலை கொடுத்துப் பெற்றிட முடியும் என்ற நிலைமையும் வரலாம். இந்த விஞ்ஞானம் வெற்றிப் பெற்றிட வேண்டுமென்றால் அந்த விஞ்ஞானிக்குத் தேவை அமைதி. அப்போதுதான் அவனுடைய சிந்தனையும், செயலும் சிற கடித்துப் பறக்கும். தேவைகளுக்காக வசதிகளை மேற்கொண்ட பணக்காரனுக்கு அவற்றைக் காப்பாற்றிக்கொள்ள, அத னால் பிரச்சனைகள் ஏற்பட முடிவில் அமைதியை இழக்கின்றான். ஏழை ஒருவன் இல்லாமையால், தன இல்லறத்தையே துறக்கவும் துணிகின்றான். பின்னர் துறந்ததை மறக்க தவறான வழியில் செல்லுகின்றான். விளைவு அமைதியின்மை. ஆனால் இவர்களிடையில் இருக்கும் நடுத்தர மக்களின் வாழ்வு வேதனைக்குரியது. வசதிகளைப் பெருக்கிக் கொள்ளவும் முடியாமல், உள்ளதைத் துறக்கவும் முடியாமல் விளங்கும் அவர்கள் நிலை பரிதாபத்திற்குரியது. இவர்கள குடும்பத்தில் திருமணமாகாத 30 வயது பெண்ணும், வேலையில்லாத 30 வயது பிள்ளையும் கனவுகளுடன் உலா வருவது ஒரு நிதர்சன உண்மை.இம் மூவகை வாழ்வு கொண்ட மக்களுக்கு அமைதி என்பது என்றுமே பஞ்சம். இந்த அமைதியை நாடிட அவர்களுக்கு வழி வகுப்பது கோயில்கள்தாம்.

இறைவனை வழிபடும் ஒரு தலமாக மட்டுமன்றிக் கலைகளின் இருப்பிடமாகவும், சமுதாயப் பிரச்சனைகளைத் தீர்த் திடும் ஒரு மன்றமாகவும் கோயில்கள் உருவாக்கப்பட்டன. மக்கள் கூட்டம் வரைமுறையின்றிப் பெருகி விட்ட இந்நாளில், இக்கோயில்கள் பெரும் பங்கு வகிக்கின்றன. ஒருவன் இன்று கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டால், நாளை அவனது பிரச்சனைகள் மறைந்து விடாது. பிரச்சனைகளை மறக்க அவன் தனிமையை நாடிடும்போது - நகரின் ஓடிக் கொண்டிருக்கும் வாழ்க்கைச் சூழலிலிருந்து சற்றே விலகி உள்ளத்திற்கும் உடலுக்கும் ஓய்வு தேடிடும்போது-ஒருவனுக்கு உள்ள ஒரே புகலிடம் கோயில்கள்தாம். பிரச்சனைகளிலிருந்து தப்பிப்பதற்காக ஒருவன் கோயிலை நாட வேண்டும் என்ப தல்ல பொருள். தனிமையில் கிடைக்கும் அமைதியின்போது அவன் சிந்திக்க ஆரம்பிக்கின்றான். பூதாகாரமாகத் தோன்றிட்ட பிரச்சனைகள் கோயில்களில் தெளிவாக்கப்படுகின்றன. அவற்றைத் தீர்க்க, வழிதேட மனம் பதப்படுகின்றது; வழிவகுக்கப்படுகின்றது. கோயிலுக்குள் வந்து இறைவனைக் கூட வழிபடாமல் தனிமையில் சில மணி நேரங்கள் இருந்து செல்வோரும் நம்மில் பலருண்டு, அமைதியில் சீரான சிந்தனைகள், வளமான செயல்கள், நிறைவான பயன்கள் விளை யும். அப்போதுதான் மனிதப் பிறவியின் மாட்சிமை புலப்படும். இவ் இறுதி இலட்சியத்திற்காகத்தான் இக் கோயில் களே ஏற்பட்டுள்ளன.

இக்கோயில்களே கடைவீதிகளாகி விட்டால் மனிதனின் புகலிடம் இறுதியாக ஒரு மனநோய் மருத்துவமனையாகத் தான் இருக்கும்.இதை மனதிற் கொண்டுதான் கோயில்களை ஆன்றோர்கள் ஊருக்கு வெளியேயும்,சோலைகளும்,காடுகளும் சூழ்ந்த இடங்களிலும், குன்றுகளிலும், மலைகளிலும் கட்டினார்கள். அகத்தில் காண முடியா அமைதியினை ஆலயங் களில் கிடைக்க வழிகோலப்பட்டது. மாட மாளிகைகளில் தேடிக் கிடைக்கா அமைதியினை, கூடகோபுரங்களில் கண்டே மன்னர்களும், இயற்கைச் சூழலில் பல பிராகாரங்களைக் கொண்ட மாபெரும் கோயில்களைத் (தங்கள் மாளிகைகளை விட) பெரும் அளவில் உருவாக்கினர்.

இத்தகு ஆன்றோர்களின் - சான்றோர்களின் - வள்ளல்களின் அனுபவங்களை மனதிற் கொண்டுதான் தி. தி. தேவஸ்தானம் தன் திருமலைக்கோயிலை அமைதியான சூழ்நிலையில், ஆன்மிகக் காற்று எங்கும் கலந்திட - அண்மைக் காலமாக சில முயற்சிகளை மேற்கொண்டுள்ளது. திருமலையில் சில பல மணி நேரங்கள் தங்கிடும் யாத்திரிகர் ஒருவர் இறைவனைத் தரிசிக்கும் முன்பு அவரது உள்ளமும்,உடலும் சுத்தமாக இருந்திடல் வேண்டுமென்பதற்காகப் பல நவீன தங்கு வசதி கட்டிடங்கள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவ் வசதிகளை விரிவுப்படுத்தும் வகையில் திருமலை குடிசைவாழ் மக்கள் திருப்பதிக்குக் குடியேற்றம் செய்யப்பட்டுள்ளனர். சாலைகள் விரிவாக்கப்பட்டுள்ளன. திருமலையில் இயற்கை எழில் மிளிரும் வண்ணம் பலவண்ண மலர்த் தோட்டங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. ஒழுக்கமும் ஒழுங்கும் உயர்வுக்கு வழிகோலுவதால், தரிசன வரிசையினை மேம்படுத்தும் வகையில் வைகுண்ட 'க்யூ' கட்டிடம் உருவாக்கப்பட்டது. உள்ளத் தையும், உடலையும் உணர்விழக்கச் செய்யும் மது, மாமிசம், புகை ஆகியவற்றின் விற்பனை, பயன்படுத்தல் தீவிரமாகத் தடை செய்யப்பட்டுள்ளன.திருமலைக்கு வரும் ஏழையும் பொருளாதார பிரச்சனையால் அலைகழிக்கப்படக்கூடாது என்பதால் இலவச உணவும், இலவச தலைமுடி மழித்தல் வசதியும், இலவச தங்கு வசதிகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இம் முயற்சிகள் யாவும், திருமலைக்கு வரும் ஒவ்வொரு யாத்திரிகர்களின் உள்ளத்திலும் சஞ்சலமற்ற உணர் வினைத் தோற்றுவித்து, ஆன்மிகச் சிந்தனையை விதைத்து தன்னையும், தன்னைச் சார்ந்த இடத்தையும் தூய்மையாக்கிக் கொள்ளத் தூண்டும் என்பதோடல்லாமல், இத் தூய்மை உணர்வு, அவர் குடியிருக்கும் ஊரின் கோயில் மற்றும் அத னைச் சுற்றியுள்ள இடத்தையும் எண்ணிப் பார்த்துத் தங்களால் இயன்ற ஆக்கப்பூர்வமான முயற்சிகளை மேற்கொள்ள வழி வகுக்கும் என்றே முழுமையாக நம்புகிறோம்.

# செய்திச் சுருக்கம்

**திருமலையில்**

நாள் ஒன்றிற்குத் திருமலைக்கு சுமார் 35,000 யாத்திரிகர்கள், குறிப்பாக விழா மற்றும் விடுமுறை நாட்களில் 50,000 யாத்திரிகர்கள் வருகை புரிகிறார்கள். இவர்கள் திருமலையில் தங்குவதற்காகத் தேவஸ்தானம் தகுந்த ஏற்பாடுகளை மேற்கொள்ள வேண்டியுள்ளது. ஆகையால் திருமலையில் 40,000 யாத்திரிகர்கள் தங்க, தக்க தங்கு வசதிகளை மேற்கொள்ளும் வகையில், திருமலையில் உள்ள குடிசை வாழ் மக்களுக்கு வேறோர் இடம் அமைத்துத் தரும் வகையில், அவர்களுக்கு திருப்பதியில் இலவச வீட்டுமனையும், குடும்பம் ஒன்றிற்கு ரூ. 2000/-மும், வீடு கட்டிக்கொள்ள தகுந்த வங்கி வசதிகளையும் தி. தி. தே. மேலாண்மை செய்து தந்துள்ளது.

ஃ ஃ ஃ

கர்னாடக மாநிலத்தைச் சார்ந்த ஸ்ரீ வியாசராய மடத்தைச் சார்ந்த தவத்திரு. வித்யாபயோநிதி தீர்த்த சுவாமிகள் 22-7-87 அன்று திருமலைக்கு வருகை புரிந்து, ஏழுமலையானைத் தரிசித்தார். அதற்கு முன்பு சுவாமிகள், திருமலையில் கோயில் மரியாதையுடன் எதிர்கொள்ளப்பட்டார்.

ஃ ஃ ஃ

விரைவில் திருமலை ஒரு சுந்தர நகரமாக (அழகு நகரமாக) மாற்றியமைக்கப்படும் என்று தி. தி. தே. பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. பி. ராமசந்திர ராஜு அவர்கள் கூறினார். இதற்கான திட்டம் இன்னும் இரண்டு மாதங்களில் சமர்ப்பிக்கப்படும் என்றும் கூறினார். இத்திட்டத்தின்படி, திருமலை அழகான பூந்தோட்டங்களையும், தி. தி. தே. ஊழியர்கள் மற்றும் உள்ளூர் மக்கள் குடியமரும் வகையில் அழகிய வீடுகளும் உருவாக்கப்படும். மேலும் யாத்திரிகர்கள் தங்கும் வகையில் 18 மாடிகளைக் கொண்ட எல்லா நவீன வசதிகளைக் கொண்ட கட்டிடத் தொகுதியொன்றும், 270அடி உயரமணிக் கூண்டு ஒன்று நிறுவப்பட்டு, அதன் மணி ஓசை 10 கி. மீ. தூரம் வரை கேட்கும் விதத்தில் இருக்கும்.

ஃ ஃ ஃ

உண்டியலில் யாத்திரிகர்களால் காணிக்கையாகச் செலுத்தப்படும் நாணயங்களை அவற்றின் மதிப்புக்குத் தகுந்தவாறு எளிதாகப் பிரித்திடும் வகையில் தி. தி. தே. மேலாண்மையே தனது போக்குவரத்துத் துறை கிடங்கு மேலாளர் திரு. குமாரசுவாமி அவர்களின் மேற்பார்வையில் அத்துறையில் பணிபுரியும் திருவாளர்கள் ஜி. நரசிம்மலு நாயுடு, என். சிவானந்த ரெட்டி மற்றும் ஆர். அப்பாத்துரை ஆச்சாரி ஆகியோர் மூலம் ஒரு புதிய இயந்திரத்தை உருவாக்கியுள்ளது. மனிதர்களால் நாணயங்களைப் பிரிப்பது என்பது ஒரு கடினமான பணியாக இருப்பதால், இம்முறை மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதனால் பல்வேறு அளவுகளைக் கொண்ட நாணயங்களை இவ்இயந்திரத்திலுள்ள சல்லடைத் தட்டுக்கள் எளிமையாக, விரைவாக பிரித்து விடுகின்றது.

ஃ ஃ ஃ

திருமலை மட்டுமின்றி ஆந்திர மாநிலத்தில்உள்ளமற்றஎந்த கோயில்களைச் சுற்றியும் மது உற்பத்தி, விற்பனை, குடித்தல் ஆகியனவும், பீடி, சிகரெட் போன்ற லாகிரிப் பொருட்களைப் பயன்படுத்துவதும் ஆந்திர மாநில அரசு அறநிலையத்துறையின் புதிய சட்டத்தின் கீழ் தடை செய்யப்பட்டுள்ளன. தடையினை மீறுபவர்களுக்கு ரூ. 500/- அபராதம் அல்லது 3 மாத சிறைத் தண்டனை வழங்கப்படும். இதுவரை திருமலையில இச் சட்டத்தின் கீழ் 600 வழக்குகள் பதிவாகியுள்ளன.

**ஏழுமலையானுக்கு**

சென்னை டி. வி. எஸ். சுசுக்கி நிறுவனத்தாரின் இரண்டு, இரண்டு சக்கர ஊர்திகளைத் திருமலையானுக்குக் காணிக்கையாக அளித்திடும் வகையில், அவற்றை அந்நிறுவனத்தின் சார்பில் திருமதி. வேணு ஸ்ரீநிவாசன் அவர்கள், தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. வெங்கடபதி ராஜு அவர்களுக்கு அளித்தார்.

**திருப்பதியில்**

தி. தி. தேவஸ்தான உதவியுடன் ஆந்திர அரசு விரைவில் திருப்பதியில் கபிலதீர்த்தத்திற்கும் மங்கலத்திற்கும் இடையே உள்ள 700 ஏக்கர் நிலப்பரப்பில் 'உயிரியல் பூங்கா' ஒன்றினை விரைவில் அமைக்கும் என்று வனத்துறை அமைச்சர் திரு. ஜி. முத்துகிருஷ்ணமநாயுடு அவர்கள் அண்மையில் திருமலைக்கு வருகை புரிந்தபோது கூறினார். கர்னாடக அரசும் சில விலங்குகளை இப் பூங்காவிற்கு வழங்க முன் வந்ததாகவும், மேலும் ஹைதராபாத், விசாகப்பட்டினம் பூங்காக்களில் உள்ள அதிகப்படியான விலங்குகளும், நாட்டின் மற்றைய உயிரியல் பூங்காக்களிடமிருந்தும் பல விலங்குகளும் இப் பூங்காவில் இடம் பெறும் என்று கூறினார்.

## சந்தாதாரர்களுக்கு ....

31-10-87 ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

*17 18 23 47 52 53 54 56 58 60 103 105 109 111 112 170 189 190 237 239 240 241 244 245 246 347 380 401 403 405 406 407 409 முதல் 416 வரை 421 428 579 581 789 793 809 810 811 813 814 817 825 826 828 829 831 832 833 836 838 2000 முதல் 2009 வரை 2013 முதல் 2019 2021 2022 2024 முதல் 2028 வரை 2030 முதல் 2050 வரை 2052 முதல் 2078 வரை 2080 2276.*

ஃ ஃ ஃ

# மேலோர் வணங்கும் மேல் கோட்டை

அந்த அதிகாலையிலும் அன்று மைசூர் பேருந்து நிலையம் தூங்கி வழிந்து கொண்டுதான் இருந்தது. 6-30 மணிக்கு, மேல்கோட்டைக்குப் புறப்பட வேண்டிய பேருந்து வண்டி ஒரு வழியாக 7 மணிக்கு வந்து சேர்ந்தது. காத்திருந்த பயணிகளை ஏற்றிக்கொண்டு பேருந்து வண்டி தனது பயணத்தைத் தொடர்ந்தது.

மேல்கோட்டைக்கு மேலக் கோட்டை என்றும், மேல் கோட்டே என்றும் வேறு பெயர்கள் உண்டு. கி. பி. 1070-ஆம் ஆண்டு வாக்கில் சோழ நாட்டை ஆண்டு வந்த மன்னன் முதலாம் வீர ராசேந்திர சோழரின் மகனான அதிராசேந்திரன் வைணவப் பெரியார் இராமானுசரைத் துன்புறுத்தி வந்தான். இவனை வைணவர்கள் 'கிருமிகந்த சோழர்' என்பார்கள்.

கிருமிகந்த சோழனின் மதவெறியிலிருந்து விடுபட்டு இராமானுசர் சத்தியமங்கலம் காடுகளில் வழியாக மைசூர் மாநிலத்தை அடைந்து சீடர்களுடன் மேல்கோட்டைக்குப் போனார். அக்காலத்தில் அப்பகுதி பிட்டிதேவன் என்பவனுடைய ஆட்சிக்கு உட்பட்டதாக இருந்தது. இம்மன்னன் இராமானுசரின் போதனையால் கவரப்பட்டு சமண சமயத்திலிருந்து வைணவனாக மாறினான். இம்மன்னனே பிற்காலத்தில் விஷ்ணுவர்த்தனன் என்று அழைக்கப்பட்டான். இம்மத மாற்றம் கி. பி. 1117 ஆண்டு வாக்கில் நடந்திருக்கலாம்.

இவ்வரலாற்று நினைவுகள் நம் மனத்திரையில் நிழலாடுகின்றன. அப்போது காலை 8 மணி. பேருந்து வண்டி மேல்கோட்டை மலையை நெருங்கிக் கொண்டிருந்தது. தொலைவிலிருந்து பார்க்கும்போதே மலை உச்சியில் யோக நரசிம்மர் கோயில் கோபுரமும், அதனைச் சுற்றியுள்ள கோட்டை போன்ற மதிலும் கண்ணில்படுகின்றன.

மலைப் பாதை சில வளைவுகளைக் கொண்டது. இவற்றைக் கடந்து பேருந்து நிலையத்தை அடைகிறது.

சித்திரைக் கோடையிலும் வெயில் அதிகமில்லை. அது ஒரு மலைவாழிடமல்லவா!

மேல்கோட்டை, மைசூருக்கு வடமேற்கே 32 மைல் தொலைவில் உள்ளது. பேருந்து நிலையத்திலிருந்து தெற்கு நோக்கிச் செல்லும் பாதை வழியே நடக்கிறோம். இரு பக்கங்களிலும் கடைகள். சிறிது தூரம் நடந்ததும் அந்தப் பாதையிலிருந்து திரும்பிக் கிழக்குப் பக்கப் பாதை வழியே செல்கிறோம். 'கல்யாணி

சேலம் அன்பரசு

புஷ்கரணி' என்னும் குளம் நம்மை வரவேற்கிறது. குளம் படிகளுடனும், சுற்று மண்டபத்துடனும் அழகுடன் காட்சி தருகின்றது.

அந்த இடத்திலிருந்து மலையின் படிகள் தொடங்குகின்றன. வெயில் என்று கவலைப்பட வேண்டியதில்லை. மலைப்படிகளின் இருபுறங்களிலும் மரங்கள் வளர்ந்துள்ளன.

கையில் பையுடன் செல்பவர்கள் வானரங்களிடம் சற்று எச்சரிக்கையாக இருப்பது நல்லது. இல்லாவிட்டால் மலை மேல் இருக்கும் யோக நரசிம்மருக்கு நிவேதனம் செய்யக் கொண்டு செல்லும் பொருள்களை நமது மூதாதையர்களுக்குத் தாரை வார்க்க வேண்டியிருக்கும்.

மலை அவ்வளவு உயரம் என்று சொல்லுவதற்கில்லை. மரக்கிளைகளுக்கு இடையிடையே கோபுரம் தென்பட்டு நம்மை வரவேற்கிறது. கோபுரத்தில் நுழைந்து யோக நரசிம்மர் கோயிலை அடைகிறோம்.



மேல்கோட்டை திருநாரணர் கோயிலின் வடக்குப்புற வெளிச் சுற்று மதிலும், மண்டபமும்



மேல்கோட்டை இராமனுசர் திரு அவதார உற்சவத்தின்போது.

யோக நரசிம்மர் கிழக்கு நோக்கிய முகம். சங்கு சக்கரங்களை ஏந்திய கைகளைத்தவிர, முழங்கால்களின் மேல் தொங்கப்போட்ட இருகைகள். கோயிலுக்கு உள்சுற்றும், வெளிச்சுற்றும் உள்ளன. வெளிச்சுற்றை ஒட்டி இடுப்பு உயரமுள்ள மதில். அங்கு நின்று பார்த்தால் சுற்றுப்புறம் முழுவதும் கண்களுக்கு விருந்தளிக்கின்றன.

மலையிலிருந்து இறங்கி ஏற்கெனவே நடந்த பாதையில் தெற்கு நோக்கி சுமார் இரண்டு பர்லாங் தொலைவு நடந்து திருநாராயணர் கோயிலை அடைகிறோம்.

கிழக்கு நோக்கிய கோயில் நீண்ட மதில் சுவர்களுடனும் நடுத்தர உயரமுடைய கோபுரத்துடனும் காணப்படுகின்றது. கோபுரத் திருப்பணி நடைபெற்று வருகின்றது.

பொதுவாகத் தமிழகக்கோயில் மதில் சுவர்களிலிருந்து வித்தியாசமாகக் காணப்படுகின்றன, மைசூர் மாநிலக் கோயில் மதில் சுவர்களின் அமைப்பு. தமிழகக்கோயில் மதில் சுவர்களின் மேல் சிவன் கோயிலாக யிருந்தால் நான்கு மூலைகளில் காளை மாட்டுச் சின்னங்களும், திருமால் கோயில்களாக இருந்தால் கருடாழ்வார் உருவங்களும் இருப்பது வழக்கம். ஆனால் மைசூர் கோயில்களில் மதில்களின் மேல் வரிசையாக அந்த அந்தக் கோயில்களுக்குத் தொடர்புடைய சுதை வடிவங்கள் காணப் படுகின்றன.

கோயிலின் எதிரில் ஒரு கொடிக் கம்பமும், அதனைக் கடந்து இருபத்து நான்கு தூண்களை உடைய கருடன் மண்டபமும் உள்ளன. கருடன் ஏழடி உயரம் உள்ளது.

கோயிலுக்குள் நுழைகிறோம். மூலவரின் மகாமண்டபத்திற்கும் முன்கோபுர மண்டபத்திற்கும் இடையில் உள்ள 'பாதாள அங்கணம்' என்னும் இடத்தைக் கடந்து மகாமண்டபத்தில் நுழைகிறோம்.

மகாமண்டபத்திற்கு 'நவரங்க மண்டபம்' என்று பெயர். மகாமண்டபத்திற்கும் மூலவர் இருக்குமிடத்திற்கும் இடையில் உள்ள அர்த்த மண்டபத்திற்கு "சுகவாசி" என்று பெயர். மகாமண்டபம் 30 தூண்களைக் கொண்டது. ஒய்சாளர் கலைப்பாணியைக் கொண்டது.

மகாமண்டபத்தின் தூண் ஒன்றின் கீழ்ப்பட்டையில் ஒரு சாண் உயரத்தில் மைசூர் மன்னர் இராஜ உடையார் திருவுருவச் சிற்பம் தலைப்பாகை, மீசை, இடுப்பில் குத்துவாளுடன், கூப்பிய கரகங்களுடன் காணப்படுகின்றது. சாற்றுமுறை முடிந்ததும் இத்திரு உருவத்திற்கு முதல் மரியாதை நடைபெறுகிறது. பிறகுதான் மற்றவர்களுக்குத் தீர்த்தம் வழங்கப்படுகிறது.

மூலவர் நின்ற கோலம். திருநாராயணர் என்பது திருப்பெயர். சங்கு சக்கரம், அபயக் கரங்களுடன், தண்டாயுதம் தாங்கி, நான்கு கையுடன் காட்சி தருகின்றது திருமாலின் திருவுருவம். ½ அடி உயரத்தில் உள்ள பீபி நாச்சியாருடைய திருவுருவம் வெள்ளிக் கவசத்துடன் மூலவரின் பாதங்களில் சாய்த்து வைக்கப்பட்டுள்ளது.

"மூலவர் திருநாராயணரின் முடியில் விலை மதிப்புள்ள கற்கள் பதிக்கப்பட்ட தங்கக் கிரீடம் 24 சேர் எடை உடையது. மைசூர் மன்னர் மும்முடி கிருஷ்ணராஜ உடையாரின் அன்பளிப்பு. பூணூலில் ஆறு இழைகள், நாகாபரணம் தங்கத்தால் செய்யப்பட்டன. மூலவருக்கு முன்னிலையில் புனித நீர் (தீர்த்தம்) வைக்கப்பட்டுள்ள வெள்ளிப்பாத்திரங்களில் பெரும்பாலும் திப்புசுல்தானின் அன்பளிப்பு. இத்தகவல்களை நமக்குத் தருபவர் கோயில் அர்ச்சகர் நரசிம்ம அய்யங்கார்.

மூலவரின் உள்நாழி (மூலத்தானம்)க்கு வெளியே வாயில் காப்போர். இடது பக்கம் 'விசுவ சேனர்' என்று அழைக்கப்படும் நம்மாழ்வார் சன்னதி.

திருநாராயணரின் திருவுருவம் நம் கண்களை மீண்டும் கவர்கின்றது. இவ்வுருவத்தை இன்றுள்ள இடத்தில் பிரதிட்டை செய்தவர் இராமானுசர். அதற்கு முன்பு அவ்வுருவம் மண்ணில் புதைந்து கிடந்ததாம். அதை அகழ்ந்து எடுத்து நிறுவிய பெருமை இராமானுசரையையே சேரும். திருமண் இட்டுக் கொள்வதற்கான வெண்கற்களும் இங்குதான் அவருக்குக் கிடைத்ததாம்.

மகாமண்டபத்தில் தெற்குப் பார்த்த நிலையில் உள்ளது உற்சவ மூர்த்தியின் சன்னதி. உற்சவர் திருவுருவத்தை 'செல்வராய' என்று கன்னடத்தில் குறிப்பிடுகிறார்கள். செல்வப்பிள்ளை, சம்பத்குமார், இராமப்பிரியா என்னும் பெயர்களும் உற்சவமூர்த்திக்கு உண்டு. நின்ற நிலை. இருபுறமும் மண்மகள், திருமகள் (பூமாதேவி, ஸ்ரீ தேவி) திருமேனிகள்.

உள்சுற்று மதிலின் மேல் தசாவதாரச் சுதைச் சிற்பங்கள் அழகு செய்கின்றன.

கோயிலின் வடக்குத் திருச்சுற்றில் யதுகிரிநாச்சியார் சன்னதி உள்ளது.

இதன் மகாமண்டபத் தூண்கள் ஒய்சாளர் பாணி வேலைப்பாடுகளைக் கொண்டுள்ளன. உற்சவத் திருமேனிக்குக் கல்யாணநாயகி என்பது பெயர்.

உள்திருச்சுற்றின் வடகிழக்கில் தெற்கு நோக்கி அமைந்துள்ளது இராமானுசரின் சன்னதி. உற்சவரின் புறப்பாட்டிற்கு ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறார்கள் அர்ச்சகர்கள்.

அன்று சித்திரை மாதம் திருவாதிரை நட்சத்திரம் இராமானுசரின் பிறந்த நாள் என்பது அப்போது நினைவுக்கு வருகிறது. நமது நினைவுப் பறவை பத்தாம் நூற்றாண்டிற்குப் பறந்து செல்கிறது.

சோழ நாட்டிலிருந்து புறப்பட்டு மைசூருக்கு வந்த இராமானுசர் முதலில் தொண்டனூரிலும் பிறகு பாண்டவபுரத்திலும் தங்கியிருக்கிறார். இங்கு அவர் வருகை தந்த காலம் கி. பி. 1070 வாக்கில்.

திருநாராயணரை நிறுவிய இராமானுசர், உற்சவர் திருவுருவமும் எங்காவது இருக்கக் கூடும் என்று தேடலானார். அது டில்லி பாதுஷாவின் அரண்மனை அந்தப்புரத்தில் இளவரசியிடம் இருப்பதை உணர்ந்து அதைப் பெற்று வரும் பயணத்தில் ஈடுபட்டார்.

டில்லி பாதுஷாவின் இசைவு பெற்று உற்சவத் திருமேனியாகிய இராமப்பிரியாவைப் பல்லக்கில் ஏற்றி வரும்போது பாதுஷாவின் மகளும் உடன் வருவதாகத் தெரிவித்தாள். உற்சவரை ஏற்றி வரும் பல்லக்கிலேயே அவளையும் ஏற்றிக் கொண்டு வந்தனர். ஆனால் இடைவழியிலேயே அவள் மாயமாக மறைந்து இறைவனுடன் ஒன்றி விட்டதாகக் கூறப்படுகிறது.

பாதுஷாவின் மகள் உருவமே 'பீபி நாச்சியார்' என்ற பெயரில் மூலவரின் திருவடிகளில் வைக்கப்பட்டுள்ளது.

இராமானுசர் மைசூரின் சுற்றுப்புறங்களில் தங்கியிருந்த காலம் பன்னிரண்டு ஆண்டுகள். அந்தக் காலத்தில் அவர் அங்கு ஆற்றிய பணிகள் கணக்கற்றவை. இன்று மேல்கோட்டை கோயிலில் நடைபெறும் பூசனைகளும், உற்சவ முறைகளும் இராமானுசரால் ஒழுங்கு செய்யப்பட்டவை.

தம்மை அண்டி அன்பு காட்டிய தாழ்த்தப்பட்ட மக்களை அரவணைத்து அன்பு காட்டினார். இறைப்பணியில் அவர்களும் இராமானுசருக்கு உதவி புரிந்தனர். அவர்களை இராமானுசர் 'திருக்குலத்தோர்' என்று அழைக்கத் தொடங்கினார்.

தாழ்த்தப்பட்ட மக்கள் கோயிலுக்குள் நுழையக்கூடாது என்ற விதியைச்சிறிதுதளர்த்திப் புரட்டாசி மாதம் நடைபெறும் தேர்த் திருவிழாவின்போது மூன்று நாட்கள் அரிசனங்கள் கல்யாணிக் குளத்தில் (புஷ்கரணி) இறங்கி நீராடவும், கோயிலின் கொடிக்கம்பம் வரை வந்து, திருச்சுற்றை வலம் வரவும் ஏற்பாடு செய்தார் இராமானுசர்.

மீண்டும் மனப்பறவை நம்மிடம் வந்து சேருகிறது. மேல்கோட்டை இராமானுசரின் சன்னதியின் முன்பு இருக்கிறோம் என்பது நினைவுக்கு வருகிறது.

இக்கோயிலில் பரமபதநாதன் சன்

## சீடனின் புகழ் பாடிய ஸ்ரீவியாசராஜர்

மாமியார் மெச்சிய மருமகளை உலகம் கண்டதுண்டு. ஆனால் சீடனின் புகழ்பாடிய குருவைப் பற்றி கேட்டதுண்டா? இதோ கேளுங்கள். அந்த குருவும் சரி, சீடனும் சரி, சாமானியமானவர்கள் அல்ல. மகா புருஷர்கள். மகா ஞானிகள். 'குருவோ 'நவீன வியாசர்' என்னும் பெரும் புகழ் கொண்ட ஸ்ரீ வியாசராஜர். சீடன் என்பவரோ "நாரத மஹரிஷியின் அவதாரம்" என்று போற்றிப் பாராட்டப்படும் ஸ்ரீ புரந்தரதாசர். தனது சீடனின் பெரும் சிறப்பினைப் பல காலம் கண்டு உணர்ந்த ஸ்ரீ வியாசர்ராஜர் உள்ளம் கனிய "தாசரெந்தரெ புரந்தர தாசரய்யா" என்ற கல்யாணி ராக கீர்த்தனம் ஒன்றில் பாடி மகிழ்கிறார்.

இனிக்கும் கற்கண்டு மொழியில்—கன்னட மொழியில்—எளிய சொற்களைத் தொடுத்து ஸ்ரீ புரந்தரதாசர் புனைந்த பாமாலைகள் கர்நாடக தேசமெங்கும்—ஏன்? அதற்கு அப்பாலும்-புகழ் மணம் பரப்பியது. அது நாள் வரையில் பண்டித சிரோமணிகள் பூஜை அறையில் ஒளிந்து இருந்த ஒப்பற்ற ஆன்மீக உண்மைகள்—அவதார ரகசியங்கள் போன்றவைகள் (கூறும்) ஸ்ரீ புரந்தரதாசரின் பாட்டொலியால் பாரெங்கும் புனிதம் கொண்டன. கற்றவன்-கல்லாதவன், பணம் படைத்தவன்-பரம ஏழை, மேல் குலத்தவன்-தாழ்குலத்தவன் போன்ற எவ்வகை வேறுபாடுகள் இன்றி அனைவரையும் தாசரது பாடல் பக்தி பரவசத்தில் ஆழ்த்தியது. அது மட்டுமா? ஆன்மீகத் துறையிலும் பக்தி நெறியிலும் பாமர மக்களிடம் பெரும் மாற்றத்தை ஏற்படுத்த ஆசார்யர்களும் பீடாதிபதிகளும் ஆண்டாண்டு காலம் முயன்றும் வெற்றி காணாத சாதனையை தாசரது சாகித்தியம் வெகு எளிதில் வெற்றி கண்டது. இதுவே ஸ்ரீ புரந்தரதாசரின் பெரும்பணி. அபார மகிமை.

திரு. ஆர். சுப்பராவ் - -திருக்கோவலூர்.

னதி, சுதர்சன ஆழ்வார், திருக்கச்சி நம்பி, ஆஞ்சநேயர், கஜேந்திரன், கூரத்தாழ்வார், பிள்ளை லோகாச் சாரியார் ஆகியவர்களுக்குத் தனித் தனியே சன்னதிகள் உண்டு. ஆண் டாள் சன்னதி இங்கு இல்லை.

கோயிலுக்குள் தென்கிழக்கு மூலை யில் மைசூர் அரசர் கிருஷ்ண உடை யாருக்குத் தனியே சன்னதி உண்டு. சாற்றுமுறையின்போது இவருக்குத் தனியாக மரியாதை நடைபெறும். இச்சன்னதியின் சுவற்றில் 7'×2' அளவில் இரு கல்வெட்டுகளும், 8'×2' அளவில் ஒரு கல்வெட்டும் கன்னடத்தில் உள்ளன. கோயிலின் உள்சுற்றுச் சுவரில் கன்னட மொழிக் கல்வெட்டுகள் ஆங்காங்கே காணப் படுகின்றன.

கோயிலுக்கு வெளியே வரு கிறோம். அக்காள் குளம், தங்கை குளம் என்றும் இரண்டும் இப்பகுதி யில் பெயர் பெற்றவை. திருப் பணிக்காக அக்காள் தான் கட்டிய திருக்குளத்திற்கு எவ்வளவு செலவா யிற்று என்று கணக்குப் பார்த்தா ளாம். தங்கை கணக்குப் பார்க்க வில்லையாம். ஆகவே அக்காள் குளத்தின் நீர் உப்பாகவும், தங்கை குளத்தின் நீர் இனிப்பாகவும் இருக் கிறதாம். இரண்டும் அருகருகே இருந்தும் இவ்வாறு ஆகிவிட்டன வாம். உள்ளூரில் வழங்கப்படும் ஒரு கதை இது. திருப்பணிக்காகச் செய்யும் செலவுக்குக் கணக்குப் பார்க்கக்கூடாது என்பதை இக்கதை நமக்கும் குறிப்பாக உணர்த்தும்.

கோயிலைச் சுற்றியுள்ள புனித நீர் நிலைகள் (தீர்த்தங்கள்) கல்யாணி புஷ்கரணி, வேத புஷ்கரணி, தனுஷ் கோடி, யாதவதீர்தம், மைத்திய ரேய தீர்த்தம், தர்பதீர்த்தம், பலாச தீர்தம், பத்மதீர்த்தம் ஆகிய எட் டும் 'அஷ்ட தீர்த்தங்கள்' என்று அழைக்கப்படுகின்றன. இவற்றைத் தவிர வைகுண்ட கங்கை, நாராயண தீர்த்தம் ஆகியவையும் உள்ளன.

இங்கு நடைபெறும் உற்சவங்கள் வைரமுடி, வசந்தோற்சவம், பெரிய ஊஞ்சல் உற்சவம், திருப்பவித்தி ரோத்சவம், அஷ்ட தீர்த்த உற்சவம் முதலியன. வைரமுடி உற்சவம் பங் குனி மாதம் பூச நட்சத்திரத்தில் வருகிறது. உற்சவருக்கு வைரமுடி சூட்டுவதைக் காண்பதற்காக அப் போது தென் மாநிலங்களில் பல பகுதிகளில் இருந்து மக்கள் இங்கு வந்து கூடுவார்கள்.

இக்கோயிலுக்கு உற்சவ காலங் களில் பக்தர்கள் வழக்கமாக வந்து செல்கிறார்கள். சுற்றுலாப் பயணி களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. கர்னாடக அரசின் சுற்றுலாத்துறை மேல் கோட்டையை ஒரு சுற்றுலா மையமாக அறிவித்தால் மைசூருக்கு வரும் சுற்றுலாப் பயணிகள் இத் தலத்திற்கும் வந்து செல்லுவார்கள். சுற்றுலாப் பயணிகள் தங்குவதற்குக் கோயிலைச் சுற்றி சத்திரங்கள் உள்ளன.

மலைவளம் சூழ்ந்து இயற்கையன்னை யின் அரவணைப்பில் கோயில் கொண் டுள்ள இத்தலத்திற்குத் 'தென்பதரி' என்ற பெயரும் உண்டு. 108 வைண வத் தலங்களில் மேல் கோட்டை என்று அழைக்கப்படும் திருநாரண புரம் அடங்குவதில்லை என்றாலும் இராமானுசரால் நிர்மாணிக்கப்பட்ட சிறப்புப் பெற்றது. நம்மாழ் வாரால் 'உயர்வர' 'ஒரு நாய கம்' என்று தொடங்கும் பாசுரங் களில் மங்களா சாசனம் செய்யப் பட்டதாக நாலாயிர திவ்வியப் பிர பந்தம் கூறுகிறது.

பேருந்து நிலையத்தை நோக்கி நடையைக் கட்டுகிறோம். அப்போது பகல் 12-30 மணி. மைசூர் புறப் படும் பேருந்து ஆயத்தமாக நின்று கொண்டிருந்தது. மனத்தை அங் கேயே விட்டுவிட்டு உடல் மட்டும் பேருந்தில் தொத்திக் கொள்கிறது.

"ஒருநாயகமாய் ஓடவுலகுடன் ஆண்டவர்
கருநாய் கவர்ந்த காவலர் சிதைகிய
பானையர்
பெருநாடு காண இம்மையிலே பிச்சை
தாம் கொள்வர்
திருநாரணன்தாள் காலம்பெறச்
சிந்தித்து உய்மினோ"

(திருவாய்மொழி 4:1)



## பவித்திரமானது பதிமூன்று!

எண்களிலே 13 பதிமூன்று துர் அதிர்ஷ்டமானது, கெட்ட என் (Unlucky) என்பது பல மேலைநாட்டினரின் கருத்தாகும். பல நாடுகளில் பொது இடங்களில் இந்த எண்ணை உபயோகப்படுத்துவ தில்லை. ஆனால் நமது ஹிந்து சாஸ்த்திரப்படி இந்தக் கருத்து தவறான தாகும்! எப்படித் தெரியுமா? "நல்லதை எல்லாம் செய்கிறவர்" - என்று பொருள்படுகிற "சங்கர" என்னும் ஆச்சார்யாளின் நாமம் 13 முறைகள் வருவதே இதற்குச் சான்று! அது மட்டுமல்ல, ஸ்ரீ ஆஞ்ச நேயர் எப்போது பார்த்தாலும் 13 எழுத்துக்களைக்கொண்ட, "ஸ்ரீராம் ஜெயராம் ஜெய ஜெய ராம்" — என்ற மந்திரத்தையே ஜபித்துக் கொண்டிருப்பவர். அத்துடன் 13 நல்லது என்பதால் "தேரா அக்ஷர்" என்று வடநாட்டில் இது விசேடமாகச் சொல்லப்படுகிறது. ருத்ரகன பாடத்தில் 13 தரம் சொல்லப்படும் பரமேஸ்வர அவதார மான 'சங்கரர்' ருத்திராம்சமாக வந்து 13 அட்சரத்தையே சொல்லிக் கொண்டிருக்கும் ஆஞ்சநேயருக்கு அருகிலேயே இருப்பது, அதாவது இராமேஸ்வரம் என்னும் புனித ஸ்தலத்தில் ஸ்ரீ சங்கர மடம் அமைந்திருப்பது மிகவும் பொருத்தமாகும்!

ஏ, நாகராஜன் — கடலூர்-1.

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 12

த்ருத்யா யயா தாரயதே
மன: ப்ராணேந்திரியக்ரியா!!
யோகேனுவ்ய பிசாரிண்யா
த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ ||

(18-33)

'அர்ஜுனு! யோகத்தைக் கொண்டு பிறழாத எந்த உறுதியால் மனம் பிராணன் மற்றும் இந்திரியங்களின் செயல்களை ஒருவன் காக்கின்ருனே அந்த உறுதி ஸாத்விகமானது'.

'திருதி' என்ற சமஸ்கிருத பதத்தை 'உறுதி' என்று தமிழில் மொழி பெயர்க்கலாம். ஆங்கிலத்தில் இது steadfastness எனப் பொருள்படும். இந்த திருதி அல்லது உறுதி முக்குணங்களுக்கேற்ப மூவகைப்படுகிறது. சாத்விக த்ருதியைப் பற்றிய விளக்கம் இந்த சுலோகத்தில் வருகிறது. பல்வகை எண்ணங்களால் சிதறுண்ட மனம் விரைவில் ஆற்றலை இழக்கிறது. மாருக மன ஒருமைப் பாட்டால் அலையும் மனத்தை ஒன்றில் லயிக்கச் செய்தால் அதன் ஆற்றல் பன்மடங்காகப் பெருகுகிறது. சிதறடையும் சூரிய கிரணங்களை ஆடியின் மூலம் ஒரு முகப்படுத்திஞல், அந்த ஒளி பிறபொருட்களை விளக்கிக் காட்ட வல்லதாகிறது. அறிவும், ஆற்றலும் ஒன்றுபட்ட அந்தக்கரண நிலையானது திருதி எனப்படுகிறது. திசைமானியின் காந்த ஊசியானது யாண்டும் வடக்கு திசையையே காட்டிக் கொண்டிருக்கும். அதுபோல சாத்விக உறுதியுடையவனின் தன்மையானது சதா இறைவனைக் குறித்ததாகவேயிருக்கும். இலட்சியம் இன்னதென்று உறுதியாகத் தெரிந்து கொண்டு விட்டால் பின்னர் அதிலிருந்து எந்நிலையிலும் சிறிதும் பிறழலாகாது. இன்பத்திலும் துன்பத்திலும், லாபத்திலும் நஷ்டத்திலும். பெருமையிலும், சிறுமையிலும், இகழ்ச்சியிலும் புகழ்ச்சியிலும், பாத பூஜையிலும், பாதுகா பூஜையிலும் எவனது மனம் சிறிதும் சலனமடையாது சமநிலையில் இருக்கிறதோ அத்தகைய உறுதி சாத்விகமானது என்று அறியலாம். அது ஒருவனை சான்ருேனுக்குகிறது.

யயா து தர்மகாமார்த்தான்
த்ருத்யா தாரயதேऽர்ஜுன |
ப்ரஸங்கேன பலாகாங்க்ஷீ
த்ருதி: ஸா பார்த்த ராஜஸீ ||

(18-34)

"எந்த உறுதியிஞல் அர்ஜுஞ, அறம் பொருள் இன்பங்களை ஒருவன் காக்கின்ருனே, பற்றுதலால் பயனை விரும்புகின்றவனுகிருனே அந்த உறுதியானது ராஜஸமானது."

உலக வாழ்வில் மனிதன் பெற வேண்டியவை நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு ஆகும். சமஸ்கிருதத்தில் இவை தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் எனப்படுகின்றன. இந்நான்கில் முதல் மூன்று இவ்வுலகத்துடன் தொடர்புடையவை. அதாவது இம்மையில் அடையப்படுபவை. வீடு அல்லது மோக்ஷம் முறையாக இவ்வுலகில் வாழ்பவர்களுக்கு மறுமையில் கிட்டக் கூடியது. சாத்விக த்ருதி மோட்சத்தை நாடும். உலக வாழ்வில் லயித்த மனம் பொதுவாக மோட்சத்தை நாடாது.

மனிதன் படுகின்ற பாட்டையெல்லாம் சுருக்கமாகக் கூறின் பொருளையும், போகத்தையும் பெறுவதற்கான இடைவிடாத முயற்சி என்ற வார்த்தைகளில் அடக்கி விடலாம். எவ்வளவு பொருள் சேர்த்தாலும் இன்னும் பொருள் வேண்டும் என்ற ஆசைக்குட்பட்டுத்தான் நம்மில் பலர் இரவு பகலாகப் பேய் போலத் திரிந்து படாத பாடுபட்டுப் பொருளைச் சேர்த்த வண்ணம் இருக்கின்றனர். போதும் என்ற வரம்பு இதற்கு இல்லையாகையால் பலர் பணப் பேய்களாகவே மாறிவிடுவதை நாம் காண்கிருேம். 'என் தேவைக்கு இவ்வளவு கடவுள் கொடுத்திருக்கிருர். எதற்காக நான் லஞ்ச லாவண்யத்திலும், ஊழலிலும், ஈடுபட்டு பணப் பேய்க்கு அடிமையாக வேண்டும்?' என்று நிம்மதியாக யாராவது நம்மிடையே வாழ்வாரேயாகில் அவரே இலட்சியப் புருஷர். அத்தகையோரைத் தேடிப் பாருங்கள்! தேவைக்கு எல்லையுண்டு. ஆனுல் ஆசைக்கு எல்லையே கிடையாது.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.Sc., M.Phil.,
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

பொருள் தேடுவது அதனுல் நாம் அடையும் இன்பத்திற்காகவேயாகும். எத்தனை வகை இன்பங்களை நாம் தேடுகிருேம்! உயிர்கள் அனைத்துமே இன்ப நாட்டத்திற்காகவே வாழ்கின்றன. துன்பத்தை எந்த உயிரும் விரும்புவதில்லை. ஒவ்வொரு உயிரும் ஒவ்வொரு விதத்தில் இன்பத்தை இடைவிடாது நாடிய வண்ணம் இருக்கின்றது. எங்கே பற்றுதல் இருக்கிறதோ-பணத்தில், பதவியில் புகழில்-

அங்கே சுயநலமும் கூடவே காணப் படும். இத்தகைய மனப்பாங்கும், உறுதியும் ராஜஸிகமானதாகும்.

அடுத்து தாமஸிக உறுதியின் பாங்கு பகரப்படுகிறது.

யயா ஸ்வப்னம் பயம் சோகம்
விஷாதம் மதமேவ ச |
ந விமுஞ்சதி துர்மேதா
த்ருதி: ஸா பார்த்த தாமஸீ ||
(18-35)

'அர்ஜுனா! தூக்கத்தையும், அச்சத்தையும் துயரத்தையும் மனக்கலக்கத்தையும் கர்வத்தையும் விடாது பற்றிக் கொண்டிருக்கும் அறிவிலியின் உறுதி தாமஸமானது.'

'தமஸோ மா ஜ்யோதிர் கமய' என்பது உபநிடதத்தில் காணப்படும் பிரார்த்தனை யாகும். "இருளிலிருந்து ஒளிக்குஎன்னை இட்டுச் செல்வாயாக" என்பது இதன் பொருள். தமோ குணமும் இருளும் ஒன்றோடொன்று தொடர்புடையவைகளாகும். இருள் என்றதும் அதனுடன் தொடர்புடைய குணங்களைப் பற்றிக் கொஞ்சம் சிந்தியுங்கள்! இருளைக் கண்டு பயப்படுகிறோம் இல்லையா? எனவே அதற்கும் பயத்திற்கும் தொடர்பு உண்டு. அது மட்டுமல்ல? நம்மில் பலர் பகலில் உறங்கும் வழக்கத்தைக் கொண்டு விளங்குகிறோம். உறங்குவது மட்டுமின்றிப் பகற்கனவும் சில சமயங்களில் காண்பதுண்டு. அத்தகையவர்களிடம் மனக்கலக்கம், மமதை, செருக்கு போன்ற ஏனைய பல துர்க்குணங்களும் காணப்படும்.

மகா பாரதம், இராமாயணம் போன்ற இதிஹாஸங்களில் வரும் பாத்திரங்கள் ஈண்டு நாம் காணும் பல குணங்களின் விளக்கமாயமைகின்றனர். கௌரவர்களைப் பெற்றெடுத்த திருதராஷ்டிரன் பிறவிக் குருடன் என்பது மட்டுமல்லாது, எது உண்மை-எது பொய், எது தர்மம்-எது அதர்மம் என்பதை பகுத்தறியும் திறமையும் அற்ற அறிவுக் குருடனாகவும் விளங்கினான். தன் புதல்வர்கள் கொடியவர்கள், முரடர்கள், தீயவர்கள், அநியாயம் மற்றும் அதர்ம வழியில் செல்பவர்கள் என்று தெரிந்திருந்தும் அவர்கள் மீதிருந்த பற்றுதல் காரணமாக அவர்களை அதர்ம நெறியினின்று தடுத்து நிறுத்த முடியாதவனாக இருந்தான். பீஷ்மர், விதுரர் போன்ற புத்திமான்கள் கூறிய அறிவுரைகளும் அவனது செவிகளில் விழவில்லை. அவனது அந்த உறுதி தமோ குணத்திலிருந்து உதித்ததாகும்.

தமோ குணம் உடையவர்கள் பக்தி மார்க்கத்தில் இருப்பவர்கள் போலத் தென்படினும் அவர்கள் யாரையும் நம்ப மாட்டார்கள். அனைவரையும் சந்தேகக் கண் கொண்டே பார்ப்பர். எத்தகைய நல்லவரிடத்தும் ஏதாவது தீய குணம் இருக்கிறதா என்பதைத் தேடிக் கண்டு பிடிப்பதிலேயே தங்கள் பொன்னான காலத்தைச் செலவிடுவர். அவர்களது வாய் புனிதமான மந்திரங்களைப் பாராயணம் பண்ணினும், கீதை, பாகவதம் போன்ற புனித நூல்களைப் பற்றி பிரச்சாரம் செய்திடினும், அவர்களது செயல்களும் சிந்தனையும் அதர்ம வழியிலேயே செல்லும். அதன் விளைவாக அவர்களது வாழ்க்கை எதற்கும் அஞ்சி அஞ்சியே கற்பனைப் பயத்திற்கு இலக்காகிச் சீரழியும். வாக்கிலும், சொல்லிலும், செயலிலும், நேர்மை உடையவர்கள் எதற்கும் எவருக்கும் அஞ்ச வேண்டியதிருக்காது. அவர்கள் சத்வ குணம் வாய்க்கப் பெற்றவர்கள். ஆனால் தமோ குணம் வாய்க்கப் பெற்றவர்கள் உலகத்தில் யாரையுமே நம்ப மாட்டார்கள். அவர்களது வாழ்க்கை தங்களையே நம்பாமல் சீரழியும். அத்தகையவர்களுடன் அமைதியையும், ஆனந்தத்தையும் விரும்பும் அன்பர்கள் சகவாசம் வைத்துக் கொள்ளலாகாது. ஒரு தாய் வயிற்றில் பிறந்த சகோதரர்களுக்கிடையில்கூட நாம் முற்றிலும் மாறுபட்ட குணங்கள் வாய்க்கப் பெற்ற சகோதரர்கள் இருப்பதைக் காணலாம். எண்ணெயும் நீரும் போல, சத்வ குணமும், தமோ குணமும் பொருந்தப் பெற்ற அத்தகையவர்கள் ஒன்று சேர்ந்து வாழ முடியாது. பிரிந்து போவதையும் இவ்வுலகில் காணலாம். எல்லாம் அவரவர் சுவபாவங்களுக்கேற்ப அமையும் வேறுபாடுகள்!

அடுத்து நாம் அனுபவிக்கும் சுகமும் மூவிதங்கள் என்பதைப் பற்றிய விளக்கம் வருகிறது.

(தொடரும்)

## கூடாதது!

**செல்லக் கூடாதது :**

பசு, அந்தணர், அக்னி, தம்பதிகள், குரு - சிஷ்யர், லிங்கம்-நந்தி, தேவதை-பலிபீடம், ஆகியவை நடுவில் செல்லக் கூடாது.

**அணைக்கக் கூடாதது :**

தீபத்தை புருஷர்கள் அணைக்கக் கூடாது.

**உடைக்கக் கூடாதது :**

பூசணிக்காயை பெண்கள் உடைக்கக் கூடாது.

**தெரியக் கூடாதது :**

ஆயுள், பொருள், வீட்டில் கலகம், மந்திரம், ஸ்திரீஸம்போகம், மருந்து, வருவாய், தனம், அவமானம் ஆகிய ஒன்பதும் பிறருக்கு தெரியக் கூடாதவை.

சொன்னவர் : ராமநாத தீட்சிதர் அவர்கள்.

தொகுத்தவர் : திருமதி. கமலா மாரியப்பன்.

# முருகன் திருத்தலங்கள்

## இக்காலத் தலங்கள்

முருகக் கடவுளின் வழிபாடு நெடுங் காலமாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அவ்வக் காலத்திய மக்கள், தங்கள் மனப்போக்கிற்கும் தேவைக் கும் ஏற்ப, பல்வேறு மலைகளிலும், நகரங்களிலும் மயில் வாகனனுக்குத் தனிக்கோயில்கள் அமைத்து வழிபட லாயினர். அக்கோயில்களில் சில, பல ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமையுடையன. ஆயினும், இன்று வரை புனிதமிகு வழிபடு தலங்களாக அவை இருந்து வருகின்றன. அவற் றுள் சிறப்புமிகு சிலவற்றைக் காண் போம்.

டாக்டர். க. த. திருநாவுக்கரசு
*சென்னை-113.*

### 1. வேழி (வேள்) மலை

கன்னியாகுமரி மாவட்டத்தில், நாகர்கோயிலுக்கு அருகிலுள்ளதலம். இதனை 'ஏரகம்' என்பாரும் உளர். முருகப் பெருமானுடைய தோற்றம் பெருமிதம் வாய்ந்தது.

### 2. குன்றக்குடி

காரைக்குடிக்குத் தென்மேற்கே 5 கி. மீ. தூரத்தில் உள்ளது குன்றக் குடி எனும் தலமாகும். இங்கு எழுந் தருளியுள்ள சுப்ரமணியக் கடவுள் வள்ளி தெய்வயானையரோடு அருள் பாலிக்கின்றார். திருவண்ணாமலை ஆதீனத் தலைவரான தவத்திரு தெய்வசிவாமணிபரமாசாரியசுவாமி களின் (குன்றக்குடி அடிகளாரின்) அருளாணையால் இத்தலம் சிறப்புற்று விளங்குகிறது.

### 3. குமரமலை

புதுக்கோட்டை நகருக்குத் தென் மேற்கில் 12 கி. மீ. தொலைவில் ஒரு காட்டுப் பகுதியில் இம்மலை அமைந் துள்ளது. அழகிய இயற்கைவளம் பொருந்திய சூழலில், புல்வயல் எனும் ஊருக்கு அருகில் குன்றில்மீது முருகப் பெருமானின் கோயில் காணப்படு கிறது. அங்கு வேலன், குமரேசனைக் காட்சி தருகிறான்.

இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் 'திருப்புல்வயல்' எனும் அவ்வூரில் குருபாததாசர் எனும் அடியவர் வாழ்ந்தார். அவர் குமரமலை முருகப் பெருமான் மீது 'சதகம்' எனும் சிற் றிலக்கியம் ஒன்றினை இயற்றியுள் ளார். அதனைக் 'குமரேச சதகம்' என நாம் போற்றி வருகிறோம்.

### 4. சிக்கில்

தஞ்சை மாவட்டத்தில் நாகப்பட் டினத்திற்குப் போகும் வழியில் உள் ளது 'சிக்கில்' எனும் சிறப்பு மிகு ஊராகும். அங்கு எழுந்தருளியுள்ள முருகன், சிங்கார வேலனாக-காதல் தெய்வமாக-கண்டவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பேரழகனைப் பேரருள் புரிகின்றான்.

### 5. மயிலம்

தென்னார்க்காடு மாவட்டத்தில், திண்டிவனத்திலிருந்து ஆறு கி. மீ. தொலைவில் ஒரு குன்றம் இருக்கிறது. அக்குன்றின் மீது ஆறுமுகப் பெரு மான் வள்ளி தெய்வயானையோடு அருள்பாலிக்கின்றான். பொம்மபாளை யம் வீரசைவ மடம் இத்தலத்தினை நிருவகித்து வருகின்றது.

### 6. குமரக்கோட்டம்

செங்கற்பட்டு மாவட்டத்தில் புகழ் மிகு காஞ்சி மாநகரில் சிறப்புற்று விளங்கும் திருக்கோயில் குமரக் கோட்டமாகும். தேவி தழுவக் குழைந்த எம்பெருமானின் திருக் கோயிலான ஏகாம்பரநாதர் கோயி லுக்கும் காஞ்சி காமாட்சி அம்மன் திருக்கோயிலுக்கும் இடையே குமர வேளின் கோட்டம் அமைந்துள்ளது. இக்கோயிலிலேயே கச்சியப்பரின்'கந்த புராணம்'கி. பி. பதினாறும் நூற்றாண் டில் அரங்கேற்றம் செய்யப்பட்டது.

### 7. திருப்போரூர்

செங்கற்பட்டு மாவட்டத்தில், சென்னைக்குத் தெற்கே 28 கி. மீ. தொலைவில் உள்ள முருகனின் தலம் திருப்போரூராகும். அங்கு ஒரு சிறு குன்று உள்ளது. அதன் சாரலில் ஊருக்கு நடுவே 'கந்தசாமி' எனப் போற்றப்படும் திருப்போரூர் முருகன் கோயில் வானுரவோங்கி அமைந்துள் ளது. நானூறு ஆண்டுகளுக்கு முன் னர், அருள்மிகு சிதம்பரசுவாமிகள் இக்கோயிலை எழுப்பித்தார். இம் முருகப் பெருமான்மீது, அவர் பாடிய யுள்ள 'திருப்போரூர்ச் சந்நிதிமுறை' எனும் சிற்றிலக்கியத் தொகுதி, பக் திப் பெருக்கும் இலக்கியச் சிறப்பும் வாய்ந்தது. இக்கோயில் மயிலம், பொம்மபாளையம் பாலைய சுவாமி மடாலயத்தின் மேற்பார்வையில் இருந்து வருகிறது.

### 8. வடதிருச்சிற்றம்பலம்

செங்கற்பட்டுமாவட்டம், மதுராந்தகம் வட்டத்தின் தலை நகராக விளங்குவது மதுராந் தகம் எனும் நகராட்சி நகர மாகும். அவ்வூரின் வடகிழக்குப் பகுதியில், பத்தாண்டுகளுக்கு முன்பு ஒரு வயல்வெளியை அகழ்ந்து எடுத் தனர். அங்கே, முருகன் கோயில்

ஒன்றன் இடிப்பாட்டையும், ஆறுமுக சாமி, வள்ளிநாச்சியார் தெய்வ திருமேனிகளைக் கண்டெடுத்தனர். அச்சிலைகளைக் கொண்டு முருகன் கோயில் ஒன்றினை அங்குள்ள மக்கள் எடுப்பித்துள்ளனர். அங்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளால், நானூறு ஆண்டுகளுக்கு முன்பு வரை 'வட திருச்சிற்றம்பலம்' எனும் முருகன் கோயில் அங்குச் சிறப்புற்று விளங்கியதாகத் தெரிகிறது. அக் கோயிலை அருணகிரிநாதர்,

மமவெனப் பத்மம் தனிற் பிறந்து
மதுராந்தகத்து
வடதிருச்சிற்றம்பலத்து
அமர்த்த பெருமானே!
(திருப்புகழ் 728)

எனவும்,

மயில்தாண்ட விங்கு முதுகுலப்
பொற் குன்றிடித்த சங்கர
மதுராந்தகத்து வடதிருச்சிற்றம்
பலத்து
அமர்த்த பெருமானே!
(திருப்புகழ் 729)

எனவும் பாடியுள்ளமை இங்குக் கருதத்தக்கதாகும்:

### 9. கந்தகோட்டம்

தமிழகத்தின் தலைநகரமான சென்னைப்பட்டினத்தின் நடுவில் அமைந்துள்ள முருகன் கோயிலுக்குக் கந்த கோட்டம் என்பது பெயர். ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனி தொடங்கப் பெறுவதற்கு (நானூறு ஆண்டுகளுக்கு) முன்பே, இக்கோயில் சென்னையில் இருந்ததாகச் செப்பேடு ஒன்றால் தெரிய வருகிறது.

சென்ற நூற்றாண்டில் சிறப்புற்று விளங்கிய இராமலிங்க அடிகள் இங்கெழுந்தருளியுள்ள முருகப் பெருமானைத் 'தருமமிகு சென்னையில் உயர்கந்த கோட்டத்துள் வளர்தல மோங்கும் கந்தவேளே!(தெய்வமணி) எனறு போற்றிப் பாடியுள்ளார். இன்றும் சிறப்புமிகு முருகன் தலமாகக் கந்தகோட்டம் விளங்குகிறது.

### 10. திருத்தணி

இது சென்னை—பெங்களூர் இருப்புப்பாதை வழியில் அரக்கோணத்திற்கு வடமேற்கே பத்து கி. மீ. தொலைவில் உள்ள திருத்தலமாகும். பல்லவர் காலத்தில் எடுக்கப்பட்ட, சிற்ப வேலைப்பாடு உடைய வீரட்டானேசுவரர் கோயில் இவ்வூரின் கிழக்குப் பகுதியில் சிறப்புற்று விளங்குகிறது. ஊரின் மேற்குப் பகுதியில் சிறுகுன்றம் ஒன்று இருக்கிறது. அதன் மீது, முருகன் இரு மனைவியரோடு அன்பர்களுக்கு அருள்பாலித்து வருகிறான்.

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர், இத்தலத்தில் கச்சியப்ப முனிவர் பிறந்தார். அவர் திருத்தணிகையாற்றுப்படை போன்ற பல சிறு பிரபந்தங்களை இயற்றியுள்ளார். இந்நூற்கள் திருத்தணியின் அருமை பெருமைகளையும் முருகப் பெருமானின் சிறப்பினையும் எடுத்துரைக்கின்றன.

### 11. வள்ளிமலை

வடஆர்க்காடு மாவட்டத்தில், வேலூருக்கு வடமேற்கே சிறப்புற்றிலங்கும் மலை வள்ளிமலை எனும் திருத்தலமாகும். இம்மலைப்பகுதியினை ஆண்ட குறவர் குலக் குரிசிலின் திருமகளே, வள்ளி நாச்சியார் என்பர். முருகப் பெருமான் வள்ளியை மனம் புரிந்த வரலாற்று நிகழ்ச்சிகள் எல்லாம் இம்மலைப் பகுதியில் நடைபெற்றதாகக் கூறுவர். இங்குக் கந்தன், காதல் தெய்வமாகக் காட்சி தருகிறான். பல யோகிகளும் ஞானிகளும் வாழ்ந்து வீடு பேறு பெற்ற தலம் வள்ளிமலையாகும்.

### 12. இரத்தனகிரி

வட ஆர்க்காடு மாவட்டத்தில் சென்னை வேலூர்ப் பேருந்து வழியில், வேலூருக்கு நான்கு கி. மீ. அருகில் கீழ்மின்னல் எனும் ஊர் ஒன்று இருக்கிறது. அங்கு வடகிழக்குப் பகுதியில் இரத்தினகிரி எனும் குன்று உள்ளது. அதன்மீது அருள்மிகு பால முருகன் திருக்கோயில் முன்னூறு ஆண்டுகளுக்கு மேலாக இருந்து வருகிறது. அண்மைக் காலத்தில் தவத்திரு பாலமுருகன் அடிமை எனும் அடிகளின் அருந்தொண்டினால், இத்தலம் சிறப்புமிகு முருகன் திருத்தலமாகப் பெருவாழ்வு பெற்றுள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள முருகன், வள்ளி தெய்வயானையரோடு கூடிய கோலத்தில் காட்சி தருகிறான்.

மற்றும் கோவை மாவட்டத்தில் கோயம்புத்தூர் நகருக்கு மேற்கில் உள்ளது மருதமலை. இம்மலையில்மீது முருகப் பெருமான் மருதவாணனாக மாண்புற்று விளங்குகிறான்.

இவற்றைப்போன்ற முருகனுடைய திருத்தலங்கள் தமிழகத்தில் மிகப்பல உள்ளன. முருக வழிபாடு எத்துணைத் தொன்மைச் சிறப்பு வாய்ந்ததோ, அத்துணைச் சிறப்பு வாய்ந்த தலங்கள் பல தமிழகத்தில் உள்ளன. குறிஞ்சிக் கிழவனாகிய முருகனின் சிறப்புமிகு தலங்கள் பல இன்றும் மலைப்பகுதிகளாகவே உள்ளன. அங்கெல்லாம் குன்றுதோறும் ஆடும் குமரனின் திருக்கோயில்கள் வீறுடன் விளங்குகின்றன. நகர நாகரிகம் சிறப்புறத் தொடங்கிய பின்னர், பெரிய பட்டணங்களில் எல்லாம் முருகனுடைய திருக்கோயில்கள் எழுப்பப்பட்டன. அவற்றுள் பல முருகனுடைய பெருமைகளை உலகிற்கு இன்றும் உணர்த்தி வருகின்றன.

''குகனுண்டு குறையில்லை மனமே''



# ஆச்சார்யார் அருளுரை

உலகில் எத்தனையோ நாடுகள் உள்ளன. ஆனுல், அவை பாரதத்தைப் போல் புண்ணிய தேசம் என்று சொல்வதற்கில்லை. எத்தனையோ நதிகள் உலகெங்கிலும் உள்ளன. ஆனுல் அவை பயிர் செய்யவும், குடிநீருக்கும், மற்ற செயல்களுக்கும் மட்டுமே பயன்படுகின்றன. கங்கையைப்போல், காவிரியைப்போல் அவை புண்ணிய நதிகள் என்னும் பெயரைப் பெறுவதில்லை. எத்தனையோ உயரமான மலைகள் உலகெங்கிலும் உள்ளன. ஆனுல், அவை இயற்கை எழிலை எடுத்துக் காட்டுவதாக மட்டுமே உள்ளன. நம் நாட்டு மலைகளோ இறை வாழும் இருப்பிடங்களாகவும், இறையுணர்வை ஊட்டும் புண்ணியத் தலங்களாகவும் உள்ளன.

உலகில் உள்ள நாடுகளில் ஓங்கி உயர்ந்து காணப்படும் மாடமாளிகைகளும், பெருநகரங்களும், சிறு கிராமங்களும் உள்ளன. ஆனுல், அங்கெல்லாம் கட்டடங்களின் அழகு இருக்குமேயன்றிக் கடவுள் தன்மை இருக்காது. நம் நாட்டிலோ வீதி தோறும் கோயில்களைக் காணலாம். கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்னும் பழமொழியும் நம் நாட்டில் உள்ளது. இப்படி நம் நாட்டின் எந்த நிலையை எடுத்துக் கொண்டாலும், அவற்றில் கலாச்சாரம், பண்பாடு, தெய்வீகம், ஆன்மீகம் ஆகியவை கலந்தே காணப்படும். இதுவே நம் நாட்டுக்குள்ள தனிச் சிறப்பு—பெருஞ் சிறப்பு!

நம் நாட்டில் உள்ள புனித க்ஷேத்திரங்களை மூவகையாகப் பிரிக்கலாம். 1. பழங்காலம் தொட்டே விளங்கி வரும் காசி, காஞ்சி போன்ற திருத்தலங்கள். 2. ரிஷிகள், தேவர்களால் பூசிக்கப்பட்டு வந்த பஞ்சபூத க்ஷேத்திரங்கள் போன்றன. 3. அரசர்கள், வள்ளல்கள் போன்றோரால் அர்ப்பணித்த தஞ்சை பிரகதீசுவரர் ஆலயம் போன்றன.

இவையேயன்றிப் பிற்காலத்தில் பொதுமக்களால் கட்டப்பட்டுப் பெருகி வரும் கோயில்கள் கணக்கிலடங்கா. ஞானிகட்கும், ரிஷிகட்கும், மற்றைய மேலோர்க்கும் மட்டுமே வணங்கக் கூடிய வகையில் அமைந்த கோயில்கள் பிற்காலத்தில் சாதாரணப் பொதுமக்களாலும் வணங்கக் கூடிய வகையில் விளக்கம் பெற்றன. இறைவனைத் தம்மிடத்திற்கே அழைத்து வந்து வழிபட்டு வாழ்க்கை நடத்தலாயினர்.

---

*(19-7-87 அன்று மாலை காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமி அவர்கட்குக் காஞ்சிபுரம் சமய இலக்கிய அமைப்புக்களின் சார்பில் வரவேற்பு அளிக்கப்பட்டது. அப்பொழுது ஸ்ரீ சங்கராச்சார்ய ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் ஆற்றிய அருளுரை).*

---

வடநாட்டில் புனித நதிகள் ஏராளம். இராமர், கிருஷ்ணர், பலராமர் போன்ற கடவுளர் அவதாரமும் வடநாட்டிலேயே நிகழ்ந்துள்ளன. ஆனுல் கடவுளர் கொள்கையைப் போதிப்பவர்கள் தென்னுட்டிலேயே அவதரித்துள்ளனர். ஸ்ரீசங்கரர், ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீமத்வர், ஸ்ரீ குமரகுருபரர் போன்ரோர் தென்னுட்டிலேயே அவதரித்து வடநாடு சென்று தெய்வீக நெறிகளைப் போதித்தனர். ஆழ்வார்கள், நாயன்மார்கள் அவதரித்ததும் தென்னுட்டிலேயேதான். வடக்கே அவதரித்த கடவுளர் தெற்கே வந்தனர். தெற்கே அவதரித்த ஆச்சார்யர் வடக்கே சென்றனர். இவ்வாறு வடக்கையும் தெற்கையும் தெய்வீகம் ஒன்ருக இணைத்தது.

"தென்னுடுடைய சிவனே போற்றி!" என்று வழிபடும் நாம் இறைவனை "எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!" என்றுதானே குறிப்பிடுகிருேம். எனவேதான் சடங்குகள், சம்பிரதாயங்கள், செயல்பாடுகள் இந்தியா முழுவதும் ஒன்று போலவே இருக்கின்றன. கலாச்சாரமும் இந்தியா முழுவதும் ஒன்று போலவே இருக்கிறது. தென்னுட்டுக் கலாச்சாரம், வடநாட்டுக் கலாச்சாரம் என்றில்லாமல் பாரதம் முழுவதும் பாரதீயக் கலாச்சாரத்தையே காண முடிகிறது. எல்லா மக்களையும் ஒன்ருக இணைப்பது பாரதீயக் கலாச்சாரமே!

வடக்கே காணப்படும் கோயில்களில் மணிச்சத்தம் கேட்டால் உடனே மக்கள் அனைவரும் கோயில்களுக்கு வருவார்கள். அங்கே ஆரத்தி நடைபெறும். ஆரத்தியில் மக்கள் ஒன்று கூடுவார்கள்.

வடமாநிலங்களில் அறநிலையத்துறை இல்லை. தமிழ்நாட்டில் மட்டுமே அறநிலையப் பாதுகாப்புத் துறை உள்ளது. வட மாநிலங்களில் மக்களே கோயில்களைப் பாதுகாத்து வருகின்றனர். அங்கே கோயில்களும் மக்களும் இணைந்தே காணப்படுகின்றனர். இதனுல் கோயில் சொத்துக்கள் திருட்டுப் போவதில்லை. கோயில்களும் புனிதமாக உள்ளன.

கோயில்களுக்கும் மக்களுக்கும் தொடர்பு வேண்டும். தமிழகத்தில்

உள்ளது போன்ற பெரிய கோயில்கள் வட மாநிலங்களில் இல்லை. ஆனால் அங்கே நடைபெறும் உற்சவங்கள் அற்புதமாக இருக்கும். அங்கே வீடுதோறும் பாராயணங்கள் நடைபெறும். கோயில்களை மக்கள் அணுகும் முறை நன்றாக இருக்கும்.

மங்கல மகளிர் வடமாநிலங்களில் கண்ணாடி வளையலையே அணிவர். கணவன் இறந்து போனால் மயானம் வரை தங்கள் கண்ணாடி வளையல்களை உடைத்துப்போட்டுக் கொண்டே செல்வர். கணவன் உயிருடன் இருக்கும்போது கண்ணாடி வளையல் அணிவதை மங்கலமாகக் கொள்வர். கணவன் இறந்த பிறகே தங்க வளையல் அணிவர்.

திருமணம் ஆன பெண்கள் தங்கள் நெற்றி வகிட்டில் செந்தூரம் (குங்குமம்) இட்டுக் கொள்வர். அதை அழுத்தமாகவும், சற்று நீளமாகவும் கூட அணிந்து கொள்வர்.

மொழிகள், உடைகள், உணவு முறைகள் ஆகியவற்றில் நமக்குள் வேறுபாடு உண்டு. ஆனால், வழிபாடு முறையில் ஒற்றுமையே இருப்பதைக் காணலாம். யார் யார் எதை விரும்பிச் சாப்பிடுகிறோமோ அதையே நாம் இறைவனுக்குப் படைக்கிறோம். படைக்கும் பொருள்களில் தான் வேறுபாடு உண்டே ஒழிய, படைப்பது என்பது நம் அனைவருக்கும் பொதுவானதே!

பெங்கால், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களில் கிருஷ்ண பக்தியே அதிகம். ஆயினும் சிவத்துவேஷம் அங்கே ஒரு சிறிதும் இல்லை. 'அரே ராமா அரே கிருஷ்ணா!' எனும் தெய்வீக நாதம் எங்கும் ஒலிக்கும். சாமியேஇல்லாதகோயில்கள் அஸ்ஸாமில் உள்ளன. அஸ்ஸாமில் மலைசாதி மக்கள் அதிகம். அவர்கள் கடவுளின் திருவுருவத்துக்குப் பதிலாகப் புத்தகத்துக்கே ஆரத்தி செய்கின்றனர். பாகவதம் என்னும் புத்தகத்திலேயே அவர்கள் அதிகம் ஈடுபடுகின்றனர். எனவே, அவர்களுக்குப் பஜனையிலும் பிரார்த்தனையிலுமே உருவ வழிபாட்டைக் காண்கின்றனர்.

சைவ பக்தி தமிழ்நாட்டிலும், கர்நாடகத்திலுமே அதிகம் காணப்படுகிறது. ஆந்திராவில் வைணவமும், சைவமும் ஆகிய இரு சமயங்களும் நிலவுகின்றன. எனினும் நம்நாடு முழுவதும் ஒரே கலாச்சாரத்தையே காண முடிகிறது. நம் நாட்டுக் கலாச்சாரம், பண்பாடு ஆகியவற்றுக்கு ஒரு நாளும் குறைவு வராது. ஏனெனின், நாம் பிறக்கும் போதே நல்ல அடிப்படைகளைக் கொண்டு வந்திருக்கிறோம். எனவே, யாராலும் நம் இந்தியக் கலாச்சாரத்தைக் குறைத்து விடமுடியாது.

பழமை என்று எதையும் பாராட்டி ஏற்றுக் கொள்ளக்கூடாது. புதுமை என்று எதையும் வெறுத்து ஒதுக்கி விடவும் கூடாது. ஏனெனில் நல்லவை என்பவை பழமையிலும் உண்டு. மூடத்தனத்தால் செய்யும் எதையும் நாம் ஏற்றுக் கொள்ளக் கூடாது.

கணிப்பொறி(கம்ப்யூட்டர்)புகுந்து விட்ட காலம் இது. கம்ப்யூட்டரால் கணக்குகள் துல்லியமாகக் கணிக்கப்படுகின்றன. அவை சரியாகவும் உள்ளன. அப்படியிருக்கும் போது பஞ்சாங்கம் முதலானவற்றுக்குக் கம்ப்யூட்டரைப் பயன்படுத்துவதில் தவறில்லை.

மேலை நாடுகளில் தொலைக்காட்சியைக் கல்வி, அறிவியல் வளர்ச்சிக்குப் பயன்படுத்துகிறார்கள். ஆனால், நம் நாட்டில் சினிமா, நாடகம் பார்ப்பதற்காக மட்டுமே தொலைக்காட்சி பயன்படுத்தப்படுகிறது. வானொலியும் அப்படியே. இத்தகைய புதுமையான சாதனங்களால் நல்லவை மட்டுமே பெருக வேண்டும். இவை படிப்புக்கும் அறிவியல் வளர்ச்சிக்கும் பயன்பட வேண்டும். எனவே பழமை, புதுமை என்று பாராமல் எவை நன்மை தரும் என்பதையே பார்க்க வேண்டும்.

நாம் இரண்டரை ஆண்டுகள் யாத்திரை சென்றோம். ஆதிசங்கரர், இராமானுசர், மத்வர், சைவ வைணவ அடியார் ஆகிய பெருமக்கள்-மகான்கள், ஞானிகள் தங்கள் புனிதமான திருவடிகளைப் பதித்த திருத்தலங்களைச் சென்று தரிசிக்கவே நாம் யாத்திரை மேற்கொண்டோம். அம்மகான்களின் புனிதத்தன்மையைக் காணவே அங்கெல்லாம் நாம் சென்று வந்தோம்.

அங்கெல்லாம் சங்கராச்சாரியார் என்ற திருநாமம் ஒன்றே தான் அவர்களுக்குத் தெரிகிறது. அந்தப் பெயரிலேயே பாடுகின்றனர். அந்தப் பெயரிலேயே கேந்திரம் அமைக்கின்றனர். பன்னிரண்டு சோதிர்லிங்கங்களையும், ஏழு மோட்சபுரிகளையும் தரிசித்தோம். ஆதிசங்கரர் எங்கெல்லாம் சென்றாரோ அங்கெல்லாம் சென்றோம். ஆனால் காஷ்மீரம் மட்டும் செல்லவில்லை. அது ஒரு குறையே! சிற்றரசர்கள் ஆண்ட காலங்களில் யாத்திரிகர்களுக்குத் தடை எதுவும் கிடையாது. மாறாகச் சிற்றரசர்கள் யாத்திரிகர்களுக்கு உதவியே செய்து வந்திருக்கின்றனர்.

தொடக்கம் முதல் கடல் வரை சென்று கலப்பதை மகாநதி என்கிறோம். நர்மதையாற்றில் மூழ்கினால் சிவலிங்கம் கிடைக்கிறது. அந்தப் புனித ஆற்றில் எடுத்துக் கொண்டேயிருந்தால், சிவலிங்கம் உற்பத்தியாகிக் கொண்டேயிருக்கும்.

இத்தகைய பெருமைகள் வெளிநாடுகளுக்கு இல்லை. நம் நாட்டுக்கு மட்டுமே உண்டு. எங்கும் கிடைக்காத சாந்தி இங்குதான் கிடைக்கும். ஆன்மீக ஒருமைப் பாட்டாலேயே நம் நாட்டிற்குச் சாந்தி கிடைக்கும். ஆன்மீக ஒருமைப்பாடே நம் நாட்டின் ஒப்பற்ற தூண். எனவே, ஆன்மீக ஒருமைப்பாடு ஓங்கி வளரட்டும்!

அனுப்பியவர் :
திரு. மா. சீதாராமன் - காஞ்சி.



# திருமண் திருக்காப்பு

இப்பூவுலகில் மானிடராய்ப் பிறப்பது அரிது. அதிலும் அரிது ஸ்ரீ வைஷ்ணவனுகப் பிறப்பது. ஸ்ரீ வைஷ்ணவனுகப் பிறந்தாலும், தன்னைக் காத்துக்கொள்ளக் காப்பு தேவை. அதைத்தான் "திருமண் திருக்காப்பு" அணிதல் என பெரியோர்கள் அறிந்தும், ஆசரித்தும், பகவானுக்குச்சேவைசெய்து வந்தார்கள்.

"திருமண் திருக்காப்பு" என்பது எம்பெருமானுக்கும், அவனது அடியார்களுக்கும் மன மொழி மெய்களால் தொண்டு செய்பவன் என்பதைக் காட்டும். இதனை பெரியாழ்வார் ஸ்ரீ பாகவத சாரமாகிய "திருமொழியில்"

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்
தாண்டு
பல்கோடி நூருயிரம்
மல்லாண்ட திண்டோன் மணிவண்ணு-
உன்
செவ்வடி செவ்விதிருகாப்பு"

என்று அருளியுள்ளார். இதையே நமது பெரியோர்கள்,

"லலாடே கேசவாயேதி சதுரங்குல
மாயதம்
சதுஸ் சக்ர தரந்தேவம் சுத்த-
ஜாம்பூநதப்ரபம்"

என்றும்,

"ஆதாய வைஷ்ணவே க்ஷேத்ரே
மிருத்திகாம் விமலாம் சுபாம்,
மூலமந்த்ரேணுபிமந்த்ரிய சோர்த்வ
புண்டராணிதாரயேத்
லலாடாதிஷு சாங்கேஷு கேச வாதிந்
யதாக்ரமம்".

என்றும் அருளியுள்ளனர்.

மேலும் பாஞ்சராத்ர ஸாஸ்திரத்திலும், உபநிஷத்துகளின் மூலமாகவும், அமரகோசம் என்னும் நூலில் இருந்தும் திருமண் திருக்காப்பைப் பற்றி அறிகிறேம்.

திருமால் திருவடி எனப் போற்றும் இத்திருமண் அணியும்பொழுது, நடுவில் இலக்குமியாகிய அன்னையின் அடையாளமாக அழகு தருவதும், குமுதமலர் போன்ற சிகப்பு நிறம் கொண்டதுமான ஸ்ரீசூரணம்அணிந்து சிறப்பிக்கிருர்கள். இது நமது ஸம்ப்ரதாயப்படி திருமாலும், தாயாரும் சேர்ந்து நமது சிரஸ்ஸில் (முகத்தில்) ஆவாகனம் செய்து வருவதாக தொன்றுதொட்டு வரும் ஆசாரமாகும்.

சிறந்த ஊர்த்துவ புண்டரத்தின் விதியும், அதனை அணிந்துகொள்ளும் இடங்களும், அதற்கான மந்திரங்களையும் அதன் ஆதிதேவதையும், அனுசரிக்க வேண்டிய வழிமுறைகளையும் நாரத மஹா முனிவர் வேத வ்யாஸருக்கு எடுத்துக் கூறியுள்ளார். அதாவது பதிமூன்று வகையான புண்டரீகத்தில் "திருமால் சரணுகாரம்" என்பதுதான் ஆசாரத்திலும், அனுபவத்திலும் இருந்து வருகிறது. எக்குலத்து பிறந்தாலும் திருமாலிடத்தில் பக்தி கொண்டவர்கள், அவனுக்கு சேவை செய்பவர்கள் "திருமால் சரணுகாரம்" என்கிற ஊர்த்வ புண்டரத்தைஅணிவதுதான் சாலச்சிறந்தது என ஆழ்வார்களும், ஆசாரியர்களும் அருளியுள்ளார்கள்.

நமது பெரியோர்கள், ஆழ்வார், ஆசாரியர்கள், யோகிகள், மஹரிஷிகள் பன்னிரு திருநாமம் அணிந்து பகவானுக்குத் தொண்டு செய்து வந்தார்கள். இக்காலத்திலும், நமது பெரியவர்கள் அணிந்து வருகிருர்கள். ஊர்த்துவ புண்டரம் அணிவதால் பகவானின் அனுக்கிரகம் கிடைக்கப்பெற்று அது சர்வ பாவங்களைப் போக்கவும் வல்லது என யஜுர் வேதத்தில் கூறியுள்ள செய்தியாகும்.

மேலும் விஷ்ணு பக்த்தராக இருக்கும் எக்குலத்தவராயினும் அனுதினம், நித்ய கர்மாக்கள் செய்யும் போதும், பூஜைகள் செய்யும் போதும் அணிந்து செய்ய வேண்டும்.

---

திரு, எஸ். லக்ஷ்மிநரசிம்மன்
விஜயவாடா.

---

நெற்றில் ஒன்றும் அணியாமல், பாழ் நெற்றியாக இருக்கக் கூடாது என நமது பெரியவர்கள் நமக்கு அடிக்கடிச் சொல்கிருர்கள். ஆகையால் நம் பெரியோர்களும், ஆழ்வார், ஆசாரியர்கள், ஞானிகள், யோகிகள், ரிஷிக்ள் அனுசரித்தும், நடந்துகாட்டியும், ஆசரித்தும் வந்தபடி நாமும் அனுதினம் "திருமண் ஸ்ரீ சூரணம்" அணிந்து திருமாலை வழிபட்டு இம்மைக்கும், மறுமைக்கும் வழிவகுத்துக் கொள்ள வேணுமாய் பிரார்த்திக்கிறேன். இதையே பராசர முனிவர் கீழ்கண்ட ஸ்லோகத்தில் அருளியுள்ளார்.

"அர்த்த பஞ்சக தத்வாக்யா, பஞ்ச
சம்ஸ்கார ஸம்ஸ்கிருதா
ஆகாரத்ரய சம்பந்நா மஹாபாக
வாதாஸ்மிருதாசிகா,
எக்யோபவீதம் சோர்த்துவபுண்டரம்
ததை வச,
பத்மாக்ஷமாலாம் கௌசேயம்
தாரயேத் சததம் திவிஜ: |"



# மதிப்புரைகள்

ஸ்ரீ அம்ருதவல்லி ஸ்தோத்திரம்: இயற்றியவர்: ராஜலக்ஷ்மி ராகவன்; கிடைக்குமிடம்: என். எஸ். வி. ராகவன், 301 நாதமுனி வீதி, திருப்பதி-517501 (ஆ. பி.); விலை: குறிப்பிடப் படவில்லை.

பல்வகைச் செல்வங்களையும் பெற்று, வளமான நல்வாழ்வினைப் பெற்றுய்ய வேண்டும் என்பதே மாந்தர் அனைவரின் விருப்பமாகும். அவற்றைத் தாயின் பரிவுடன் வழங்கும் தேவி, திருமகளே. அவ்வன்னை பல்வேறு தலங்களில் பல்வேறு பெயர்கள் தாங்கி அருள்பாலித்து வருகின்றாள். சோளிங்கர் என வழங்கிவரும் சோள சிம்மபுரத்தில் அவளின் திருநாமம் அம்ருதவல்லித் தாயார். அத்தேவியின் அருளினையும் பெருமையினையும் பரவும் பாடல்கள் கொண்டது இச்சிறிய நூல். அம்ருதவல்லி அஷ்டோத்திரமும் ஸ்ரீ மஹாலக்ஷ்மி சரணமும் பக்தியும் மிகுந்து விளங்குவதோடுகூட, பாமரரும் பாராயணம் செய்து பயன்பெறத் தக்க வகையிலும் அமைந்துள்ளன. இதைப் பாராயணம் செய்யும் முறையும் பூஜை நிகழ்த்தும் முறையும் நூலில் கொடுக்கப்பட்டிருப்பது ஒரு தனிச் சிறப்பு. இதனுல் பலனடைந்தவர்களின் அநுபவங்களையறியும் போது, சீரிய நல்வாழ்வினை விரும்பும் ஒவ்வொருவரிடமும் இருக்க வேண்டிய நூல் இது எனின் மிகையாகாது.

'ஆலம்'

ஃ ஃ

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் நீதிக் கதைகள்: ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மைலாப்பூர், சென்னை-600004; விலை ரூபாய்: 4, இந்நூல் மேல் குறிப்பிட்டுள்ள விலாசத்தில் கிடைக்கும்.

இந்நூல் 1. உயிர்களிடத்து அன்பு வேண்டும், 2. கற்றது கைம் மண்ணளவு, 3. கடவுள் சாப்பிடுவார், 4. நம்பிக்கையின் உயர்வு, 5. அறை குறை அறிவு ஆபத்தே! 6. இறைவனின் நாமம், 7. மிகச் சிறந்ததையே தேடு, 8. பயனுள்ள அறிவு, 9. வெற்றியின் இரகசியம், 10. சூழ்நிலையின் வலிமை, 11. முழுமையாக அறிந்த பின் முடிவு செய், 12. பொய்யும் உண்மையானது என்னும் தலைப்புக்களில் நீதிக் கதைகள் கொண்டுள்ளது.

முதல் கதை: பார்வதி தேவி, அவள்பிள்ளைகணபதி,ஒரு பூனை ஆகிய பாத்திரங்களைக் கொண்டு அமைந்துள்ளது. இந்தக் கதையில் பார்வதி உலக மாதா என்பதை உணர்த்துவதோடு எந்த ஜீவனுக்கும் எப்பொழுதும் எத்தீங்கும் செய்யக் கூடாது. அவற்றின் மேல் அன்பு கொள்ள வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

2-வது கதை: கிணற்றுத் தவளைப் போல் குறுகிய மனப்பாண்மையோடு இல்லாமல், கடல் தவளைப் போல் பரந்த உள்ளங்கொண்டு ஒவ்வொருவரும் திகழ வேண்டும் என்ற நீதியைக் கூறுகிறது.

3-வது கதையில்: ஓர் பூசாரி, அவன் மகன் சிவகுமார் இவர்கள் மூலமாக தூய்மையான உள்ளமுடைவனருகில் எப்பொழுதும் கடவுள் இருப்பார், அப்பொழுது கடவுள் சாதாரண மனிதனைப் போல் அவர்களிடத்தில் பழகுவார் என்ற உண்மை உணர்த்தப்படுகிறது.

4-வது கதை: உள்ளத்தில் நேர்மை, கடவுளிடம் பக்தி இருந்தால் எந்த தீங்கும் வராது என்பதைத் தெரிவிக்கிறது.

5-வது கதை: பொருள்களின் உண்மை இயல்பைக் காணும் முழு அறிவை வற்புறுத்துகிறது.

6-வ்து கதையில்: வெறும் கடவுளின் நாமத்தை சொன்னுல் மட்டும் பக்தி ஆகாது; எந்தக் கடினமான சூழ்நிலையிலும் தொடர்ந்து பகவானை நினைப்பதே உண்மையான பக்தியாகும் என்ற உண்மை சொல்லப்படுகிறது.

7-வது கதையில்: கடவுளிடத்து எதையும் வேண்டாத வழிபாடே மிகவும் சிறந்தது என்பதும்,

8-வது கதையில்: வெறும் சாஸ்திர கல்வி மட்டும் போதாது, வாழ்க்கைக்குப் பயன்படும் கல்வியே பயனுள்ளது என்பதும்,

9-வது கதையில்: எந்தக் காரியம் எடுத்தாலும் அயராது உழைக்க வேண்டும். தீவிர வைராக்கியம் ஒருவனை இறைவனின் சன்னதிக்கே கொண்டு செல்லும் என்பதும் உணர்த்தப்படுகின்றன.

10-வது கதையில்: நாம் ஒவ்வொருவரும் தெய்வக்கனலின் ஒரு சிறு பொறி என்ற உண்மையை பெரிய ஞானிமூலம் தெரிந்து கொள்ள வேண்டும் என்று கூறுகிறது.

11-வதுகதையில்:கடவுளைப்பற்றிய முழுமையாக அறியாது, அறிந்து கொண்டோம் என்று பேசும் அறியாமையை, குருடர்கள் யானையின் உறுப்புகளைத் தனித்தனியே தொட்டுப்பார்த்து, யானையின் உருவத்தைக் கூறுவது போன்றது என்று உவமையால் தெளிவாக உணர்த்துகிறர்.

12-வது கதை: திருடன் ஒருவன் தன்னைப் தப்பித்துக் கொள்வதற்காக சன்னியாசி வேடம் போட்ட மாத்திரத்தில் ஆன்மீக உணர்ச்சி ஏற்பட்டதை அறிவித்து அதனுல் உண்மையான சன்னியாசியின் பெருமையைப் பேசுகிறது.

இந்நூல் எளிய மொழியில் அமைந்துள்ளது. குழந்தைகள் மிக ஆர்வமாகப் படித்துக் கொள்வதற்கு ஏற்ற வகையில் கதைகளால் உண்மைகளை உணர்த்துகிறது.

டாக்டர். என். தர்மாரெட்டி.

# நவராத்திரி மகிமை



மகிஷாஸுரமர்த்தினி நவராத்திரி அலங்காரம் — வேந்தன்பட்டி ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கேஸ்வரர் திருக்கோயில். —திரு. வி. முத்துராமன்

நவராத்ரீவ்ரதம் பூமௌ குருதே
யோ நரோத்தம: |
தஸ்ய புண்யபலம் வக்தும் ஸக்தா
ஸா பர்மேஸ்வரீ ||

அநாதியாகவே இந்துக்களுக்கு நவராத்திரி என்ற ஒரு மகா புண்ணிய காலம் வருஷந்தோறும் வருவதை யாவரும் அறியக்கூடும். அந்தப் புண்ணியகாலத்திற்கு ஸமானமான மற்றொரு புண்யகாலம் சாஸ்திரங்களில் சொல்லப்படவில்லை. அந்தப் புண்ணியகாலமோ ஒன்பது தினங்களால் நிறைந்தது. அதில் லோக மாதாவான பராசக்தியே வழிப்படப் பெறும் தேவதை. ஸ்ரீதேவியினுடைய பூஜையும், ஸ்ரீதேவியினுடைய பரதத்துவத்தைப் பிரகாசம் செய்யும் ஸ்ரீதேவீ பாகவத பாராயணமும், பஞ்சதசீ முதலான மகா மந்திர ஜபமும், ஸுவாஸினிகள், குமாரிகைகள், பிராம்மணர்கள், வடுக்கள், பிரம்மசாரிகள் இவர்களுடைய ஸந்தர்ப்பணையும் விரதத்தின் முக்கியமான அங்கங்களாகும். எந்தத் தினங்களில் ராத்திரியில் பராம்பிகை புதிது புதிதாகத் தனது ஸ்வரூபத்தைத் தன்னை ஆராதிக்கிற பக்தர்களுக்குத் தரிசனம் கொடுத்து அருள் செய்கிருளோ அந்தத் தினங்களுக்கு நவராத்திரி என்ற பெயர் விளங்கி வருகிறது. இந்த விரதத்தை அநுஷ்டானம் பண்ணுவதில் ஸ்திரீகளானாலும், புருஷர்களானாலும் இரு வகுப்பினருக்கும் அதிகாரம் உண்டு.

முதல் தினத்தில் தேவி மூன்று வயதுள்ள பாலையாகவும், இரண்டாவது தினத்தில் ஒன்பது வயதுள்ள குமாரிகை என்ற நவாக்ஷரீ ஸ்வரூபிணியாகவும், மூன்ருவது தினத்தில் பதினைந்து வயதுள்ள ஸ்திரீயாகப் பஞ்சதசாக்ஷரீ ஸ்வரூபிணியாகவும், நான்காவது தினத்தில் பதினுறு வயதுள்ள ஸ்திரீயாக ஷோடசாக்ஷரீ ஸ்வரூபிணியாகவும், ஐந்தாவது தினத்தில் சதாக்ஷீ என்ற பெயருடன் மாத்ருகா வர்ணஸ்வரூபிணியாகவும், ஆருவது தினத்தில் சாகம்பரீ என்ற பெயருடன் ஸ்ரீவித்யாபீஜாக்ஷர ரூபிணியாகவும், ஏழாவது தினத்தில் துர்க்கமாஸுரனைக் கொன்ற மகாதுர்க்கையாகவும், எட்டாவது தினத்தில் மஹிஷாஸுரனைக் கொன்ற மகாலக்ஷ்மி ஸ்வரூபிணியாகவும், ஒன்பதாவது தினத்தில் சும்பன் நிசும்பன் என்ற இரு அஸுரர்களைக் கொன்று ஜகத்தை ரக்ஷித்த மகாஸரஸ்வதியாகவும் அம்பாள் விளங்கி வருகிருள்.

ஒன்பது தினங்களிலும் தேவி மாஹாத்ம்ய பாராயணமும், லலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனையும், த்ரிசதி, அஷ்டோத்தர சதநாமாவளி முதலானவற்றினல் அர்ச்சனையும் செய்து தேவியை ஆராதிக்கிறவர்களுக்கு ஸகலவிதமான ஸௌபாக்கியமும் ஏற்பட்டு இகத்திலும் பரத்தி



மகிஷாசுர மர்த்தினி — மகாபலிபுரம் (கி.பி. ஏழாம் நூற்றுண்டுச் சிற்பம்.)
திருமதி. கமலா மாரியப்பன்-கோவை.

ஸ்வரூபம் பாஸிக்கின்றது. குண ஸாம்யாவஸ்தாபந்ந மாயோபஹித ப்ரஹ்மஸ்வரூபிணீயே பராசக்தி என்ற தேவதை. இந்தத் தேவி அகுண மான சக்தி என்று சொல்லப்படு வாள். இந்த ஸந்தர்ப்பத்தில்தான் தேவிக்குப் புவனேச்வரீ என்ற திரு நாமமும் ஏற்பட்டிருக்கிறது. இந்த ஒரு நாமம் மட்டுமில்லை; இன்னும் அநேக நாமாக்கள் உண்டு. நாமாக் களுடைய ஸங்க்யையே யாராலும் அறிய முடியாது. அவ்விதம் இருக்க, தேவியின் ஸ்வரூபத்தையா அறிய முடியும்? அம்ருதக் கடலினு டைய நடுவில் மணித்வீபம் என்ற ஸ்தலத்தில் சிந்தாமணி என்ற ரத்தி னத்தால் நிர்மாணம் செய்யப்பட்ட திவ்ய க்ருஹமே ஸ்ரீதேவியினுடைய மந்த்ரமாகச் சொல்லப்படுகிறது.

லும் ச்ரேயஸ்ஸை அடைவார்கள். வித்யையையோ தனத்தையோ யசஸ் ஸையோ புத்திர லாபத்தையோ, இன்னும் மற்றக் காமனைகளையோ பூர்த்தி செய்துகொள்வதற்கு இந்த நவராத்திரி விரதம் முக்கியமான உபாயமாகும்.

ருதுக்களுக்குள் வஸந்த ருதுவும், சரத் ருதுவும் யமதர்மராஜாவின் தந் திப் பற்களாகச் சொல்லப்பட்டிருக் கின்றன. அதாவது வஸந்த ருதுவி லும் சரத் ருதுவிலும்தான் பிராணி களுக்கு வியாதிகள் அதிகமாக ஏற் பட்டு அதனுல் கஷ்டத்தை அடை வது அதிகமாக இருக்கும் என்பது சாஸ்திரத்தின் தாத்பர்யமாகும். அந்த ஸமயத்தில் லோகமாதாவான ஜகதீச்வரியை ஆராதிக்கிறவர் களுக்கு யாதொரு விதமான வியாதி யும் ஏற்படாதென்பது திண்ணம். ஒன்பது தினங்களிலும் பிரத்தியக்ஷ மான பலனைக் கருதுகிற உபாஸகர் கள் அலவணமாக ஹவிஸ்ஸை மாத் திரம் ஒரே வேளை போஜனம் செய்து விட்டுப் பரதேவதையை ஆராதிக்க வேண்டும். அவ்விதமானுல் அவர் களுடைய மனேபீஷ்டம் உடனே நிறைவேறும் என்பதில் ஸந்தேகமே இல்லை. தசரதசக்ரவர்த்தியின் திருக்குமாரனை ஸ்ரீராமன் ராவண னுல் அபகரிக்கப்பட்ட ஸீதையை அடைவதற்கு நாரதமகரிஷியின் உப தேசத்தால் நவராத்திரி விரதத்தை அநுஷ்டித்துத் தேவியினுடைய பிர ஸாதத்தை அடைந்தார் என்று ஸ்ரீ தேவீ பாகவதத்தில் சொல்லப்பட் டிருக்கிறது. அதனுல் நஷ்டவஸ்து வின் லாபத்திற்கும் இந்த நவராத் திரி விரதாநுஷ்டானம் மிகவும் முக் கியமானதென்று ஸித்திக்கிறது.

பராம்பிகை என்ற தேவி மோக்ஷத் திற்கு ஸாதனமான ப்ரஹ்மவித் யைக்கு அதிதேவதையான பராசக்தி யாவாள். அகுணை, ஸகுணை என்று இரண்டு விதமாகத் தேவியின் ஸ்வரூ பம் சாஸ்திரங்களில் வர்ணிக்கப்படு கிறது. ஸத்துவ குணம் ரஜோ குணம் தமோகுணம் என்ற மூன்றுக் கும் க்ஷோபம் இல்லாமல், அதாவது ஒன்று மேல், ஒன்று கீழ் என்ற தார தம்யம் இல்லாமல், ஸமமான நிலை யில் இருக்கும்பொழுது ஸாம்யா வஸ்தை என்று பெயர். அந்த ஸாம்யாவஸ்தையை அடைந்த மாயை ப்ரஹ்மத்திற்கு உபாதியாக ஆகும்பொழுது தேவியினுடைய

லக்ஷ்மீ ஸரஸ்வதீ பார்வதீ என்ற தேவிகள் ஸகுணமான சக்திகளா வார்கள். ரஜோகுணமும் தமோ குணமும் கீழாக அமுங்கிப்போய் ஸத்துவகுணம் மேலிட்டிருக்கும் பொழுது அந்த மாயை ப்ரஹ்மத் திற்கு உபாதியாக இருக்கும் பொழுது அந்த ஸத்வப்ரதாந மாயோபஹித ப்ரஹ்மஸ்வரூபிணீ யான சக்தியை லக்ஷ்மீதேவி என்றும், அதே மாயைக்கு ஸத்துவகுணமும் தமோகுணமும் கீழடங்கி ரஜோ குணம் மேலிட்டிருக்கும்பொழுது ரஜ:ப்ரதானமான மாயோபஹித ப்ரஹ்மஸ்வரூபிணியான சக்தியை ஸரஸ்வதீ என்றும், அப்படியே அந்த மாயைக்கு ஸத்துவகுணமும் ரஜோ குணமும் கீழடங்கித் தமோகுணம் மேலிட்டிருக்கும்பொழுது தம:ப்ர தாந மாயோபஹித ப்ரஹ்ம ஸ்வரூ பிணியான சக்தியைப் பார்வதீ என் றும் சாஸ்திரத்தில் சொல்லியிருக் கிறது. லக்ஷ்மி ஸரஸ்வதி பார்வதி என்ற இந்த மூன்று சக்திகளும் குண வைஷம்யத்தை அடைந்த மாயோ பஹித ப்ரஹ்மரூபிணிகளாக ஆகிற படியால், ஸகுணமான சக்தி களென்று சொல்லப்படுவார்கள்.

இவ்விதம் அகுணமான சக்தி, ஸகுணமான சக்தி என்று தேவியினுடைய ஸ்வருபம் இருவகைப்படும். அகுணமான சக்தி ஸகல வேதாந்தங்களிலும் சொல்லப்படும் ஸம்வித்ரூபமான பரப்ரஹ்மமேதானுகும். அக்கினிக்கும் ஔஷ்ண்யம் என்ற சக்திக்கும் பேதம் இல்லாததுபோல், தேவிக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதமே இல்லை. தேவியே ப்ரஹ்மம், ப்ரஹ்மமே தேவீ என்று தேவியினுடைய ஸ்வரூபத்தை அநுஸந்தானம் செய்து கொண்டு, அம்பிகையை ஆராதிக்க வேண்டும்.

தேவியினுடைய ஆராதனத்திற்கு, தேவிக்குப் பிரதானமான பீடமாகிய முக்கியமான க்ஷேத்திரங்களே ஸித்தியைக் கொடுக்கக் கூடியவை. இந்தப் பாரதவர்ஷத்தில் ஹாலாஸ்ய க்ஷேத்திரம் போல் தேவியின் ஸாந்நித்யத்திற்குப் பிரதானமான பீடம் மற்ருெரு க்ஷேத்திரத்தில் இல்லை என்பது ஸித்தமானது. இந்த க்ஷேத்திரத்திலுள்ள பீடத்திற்கோ ச்யாமளா பீடம் என்ற பெயர் விளங்கி வருகிறது. அந்த நாமாவினுலேயே ஸகல போகங்களையும், ஸ்வரூப அவஸ்தானம் என்ற முக்தியையும் கொடுக்கக்கூடிய பீடம் இதுவேதான் என்று ஸித்திக்கிறது. ச்யாமம் என்ருல் மந்த்ர சாஸ்த்ர ரீதியாக ஜன்மா என்ற அர்த்தம் விளங்குகிறது. ள என்றதனுல் அவஸானம் என்ற அர்த்தத்தை அறிக. ஜன்மாவிற்கு முடிவைக் கொடுக்கும் பீடம் என்று பொருளானது பாஸிக்கிறது. இந்த க்ஷேத்திரத்திற்கு த்வாதசாந்த என்றும், ஸஹஸ்ர கமலம் என்றும், சந்திரமண்டலம் என்றும், ப்ரஹ்மரந்த்ரம் என்றும் பெயர்கள் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. நவராத்திரி புண்யகாலத்தில் இந்த க்ஷேத்ரத்தில் வாஸமும், ஸ்வர்ண பத்மினி என்ற காரணப்பெயருடன் கூடிய புண்ணிய தீர்த்த ஸ்நானமும், மீனுக்ஷி பரதேவதையின் தரிசனமுமே


நவராத்திரி அலங்காரம் (மீனுட்சி திருக்கல்யாணம்)
வேந்தன்பட்டி ஸ்ரீ மீனுட்சி சொக்கலிங்கேஸ்வரர் திருக்கோயில்.
திரு. வி. முத்துராமன் - கோவை.

புக்தி, முக்தி இவற்றைக் கொடுக்கக் கூடியது என்பதற்கு ஆக்ஷேபமே இல்லை. இது போலவே அகிலாண்டேச்வரியின் ஸந்நிதியும், காமாக்ஷியின் ஸந்நிதியும், மங்களாம்பிகையின் ஸந்நிதியும்; ப்ரமராம்பிகையின் ஸந்நிதியும், விசாலாக்ஷியின் ஸந்நிதியும் நவராத்திரி காலத்தில் விரதாநுஷ்டானம் செய்கிறவர்களுக்குப் புண்ய ஸ்தலமாகும். ஆகையால் இந்தப் புண்ய ஸ்தலங்களுக்குள் ஏதாவதொரு ஸ்தலத்தில் வஸித்துக் கொண்டு மேற்சொன்ன நவராத்திரி விரதத்தை விதிவத்தாக அநுஷ்டித்து ஸகல ப்ராணிகளும் ஸகலவிதமான ஸௌபாக்கியத்தையும் பெற யத்னம் செய்ய வேண்டும். க்ஷேத்திரங்களுக்குள் மிகவும் முக்கியமான ஹாலாஸ்ய க்ஷேத்திரத்தில் இந்த நவராத்திரி விரதாநுஷ்டானம் மஹா பலத்தைக் கொடுக்கும். இந்த க்ஷேத்திரத்தில் வஸிக்கும் ஜனங்களே மகா புண்ணியவான்கள். சத்ருக்ஷயம், ஐச்வர்ய அபிவிருத்தி, தாரித்ரிய நிவிருத்தி, வித்தையில் ப்ராசஸ்த்யம் முதலான மேன்மையை அடைய இந்த நவராத்திரி விரதமே முக்கியமான ஸாதனமாகும்.

ஸகல ப்ராணிகளுக்கும் மாத்ரு பக்தி மிகவும் அவசியமாகும். 'மாத்ருதேவோ பவ' என்று ச்ருதியும் மாதாவை முதல் தெய்வமாகப் போதிக்கிறது. அவ்விதம் போதிக்கப்பட்ட மாதாவோ ஸர்வலோக ஜனனியான ஜகதீச்வரியேதானுவாள். அந்தத் தேவியின் சரண கமலத்தில் பக்தியில்லாத ஜனங்களைத் தௌர்ப்பாக்யத்தைச் செய்தவர்கள் என்றே தீர்மானிக்க வேண்டும். நவராத்திரி புண்யகாலத்தில் அந்தத் தேவியை ஆராதிக்க வேண்டியது அவசியமாகும். தனது கிருகத்தில் கும்பஸ்தாபனம் செய்து அதில் தேவியை ஆவாகனம் செய்து ஷோடசோபசார பூஜைகள் செய்து ஸ்ரீஸூக்தம் முதலான ஸூக்த பாராயணமும், லலிதோபாக்யான பாராயணமும், ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனையும் பிரதிதினம் செய்து, குறைந்த பக்ஷம் ஒரு சுமங்கலிக்காவது பிரதிதினம் போஜனம் செய்து வைத்து, விஜயதசமி தினத்தில் விரதத்தை ஸமாப்தி செய்ய வேண்டும். அப்படிச் செய்கிறவர்களுக்குத் தேவியினுடைய தரிசனமும், ஸகல ஸௌபாக்கியமும் ஸித்திக்கும் என்பது நிச்சயம். ஆகையால் ஸகலவிதமான ப்ராணிகளும் ஸ்ரீதேவியின் சரணுரவிந்தத்தில் பக்தியுள்ளவர்களாக வேண்டும்.

[நன்றி: ஸ்ரீ காமகோடி ப்ரதீபம் 17-9-1973]

# ★ பழையனூர் ★

முடிவை முத்து-கோவில்பட்டி

பழையனூர் என்பது சிவபெருமான் எழுந்தருளியுள்ள ஊர்களில் ஒன்றாகும். இவ்வூரை, திருவாலங்காடு என அழைக்கின்றனர். ஆலமரக்காடாகயிருந்து அங்குக் கூத்தப் பெருமான் நடஞ்செய்தமையால் இப்பெயர் வந்தது என்று கூறுவர். இதனையே வடாரண்யம் எனவும் கூறுவர்.

முன்பு ஓர் அந்தணன் தன் மனைவியோடு இனிதே வாழ்ந்து வந்தான். அவன் பரத்தையர் கேண்மை கொண்டு, தன்னுடைய பொருளை இழந்து வறிஞன் ஆனான். அவனுடைய மனைவி 'நீலி' என்பவள் தன் பெற்றோர் இல்லத்திற்குச் சென்று வாழ்ந்து வந்தாள்.

அந்நாளில், அவன் அவளுடைய அணிகலன்களைக் கைப்பற்றும் எண்ணத்தில், அவள் பாற்சென்று தான் திருந்திவிட்டதாகக் கூறி தன்னுடன் வாழ வருமாறு அவளை அழைத்தான். அவளும் அவனை நம்பி, அவனைப் பின் தொடர்ந்தாள்.

அவ்வாறு வரும்பொழுது மேற்கூறிய காட்டிலே அவளுடைய அணிகலன்களையெல்லாம் பறித்துக் கொண்டு, அங்கிருந்த ஒரு பாழுங் கிணற்றிலே, அவளையும் அவர்களுடைய குழந்தையையும் தள்ளிக் கொன்றுவிட்டுச் சென்றுவிட்டான்.

மறுபிறவியில் அவ்வந்தணன் ஒரு வணிகன் மகனாய்ப் பிறந்து வியாபாரம் செய்து வந்தான் ஒரு நாள் வியாபார நிமித்தம் அவன் அவ்வாலமரக் காட்டின் வழியே வந்தான். அவ்வழியே இயற்கை மரணம் எய்தாத பேயாகத் திரிந்து வந்த நீலி தனது பழைய வடிவங்கொண்டு, அவ்வணிகனைப் பின் தொடர்ந்தாள். பழையனூர் வந்ததும் அவன அப்பேயினின்றும் விடுபட எண்ணினான். ஆனால் அவளோ அங்குள்ள வேளாளர்களிடம் தன் கணவன் தன்னைக் கைவிட்டுப் போக முயல்கிறான், அவனைத் தடுத்து வாழ்வளியுங்கள் என வேண்டினாள்.

அவ்வூர் வேளாளர்கள் கூடி அவளுடைய வழக்கைக் கேட்டனர். வணிகன் நீலியின் கூற்றை மறுத்து அவள் பெண்ணல்ல பேய் என்று கூறினான். ஆனால் அவர்கள் நீலியின் கூற்றை நம்பி அவளுடன் வாழுமாறு வணிகனை வற்புறுத்தினர். அவ்வணிகன் அவர்களிடம் 'நான் இப்பேயுடன் இருப்பேனாயின் இன்றிரவே அது என்னைக் கொன்றுவிடும்' என்று கூறினான். அவனது கூற்றை நம்பாத வேளாளர்கள் 'அவ்வாறு உன்னுயிர்க்குக் கேடு வருமாயின் நாங்கள் எழுபது பேரும் உயிர்விடுவோம்' எனக்கூறி அவனையும் அவளையும் ஒரு அறையினுள் அடைத்து வைத்தனர்.

மறுநாட் காலையில் அறையைத் திறந்து பார்த்த பொழுது அவ்வணிகன் கூறியபடியே அப்பேய் அவனைக் கொன்றுவிட்டு மறைந்து விட்டதைக் கண்டனர். அதுகண்ட அவ்வேளாளர்கள் எழுபது பேரும் தாங்கள் கூறியபடியே தீயிற் பாய்ந்தனர்.

மேற்கூறிய வரலாற்றைக் காரணமாகக் கொண்டுதான் இன்றும் தமிழ் நாட்டில் கொடிய குணமுடைய பெண்ணை 'நீலி' எனக் கூறிவருவதைக் காணலாம். ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்றாகிய 'நீலகேசி' என்னும் நூலின் ஆசிரியர் மேற்படி வரலாற்றை தெய்வம் தனக்கு கனவிற் தோன்றி உரைத்ததாகக் கூறி மேற்படி நூலுக்குத் தலைவியாக நீலியைக் கொண்டுள்ளார். திருஞான சம்பந்தரும் தம்பதிகத்துள் மேற்படி வரலாற்றைச் சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வூரில்தான் இறைவன் கூத்தாடி இறைவியைத் தோற்றுவித்தனன் என்று கூறுவர். இறைவியின் வடிவமாகிய காளியின் திருக்கோயிலும் இங்குள்ளது. இறைவன் நடஞ்செய்த ஐம்பெரும் மன்றங்களில் இவ்வூர் 'இரத்தின சபை' எனப்படும். காளியின் பொருட்டு இறைவன் 'ஊர்த்துவ தாண்டவம்' செய்ததலம். பதஞ்சலி மற்றும் வியாக்கிரபாத முனிவர்கள் இறைவனின் திருநடனத்தைக் இத்திருத்தலத்தில் கண்டதாகக் கூறுவர். இத்திருத்தலத்தில் தான் காரைக்கால் அம்மையார் தலையால் நடந்து இறைவனின் திரு நடனத்தை கண்டுகளித்தார் எனவும் கூறுவர். இத்திருத்தலத்துப் பெருமையை ஆளுடைய பிள்ளையாரும், தம் பதிகத்துப் பாராட்டியுள்ளார். 'செல்லு நெறி காட்ட வல்லார் தாமே திருவாலங்காடுறைஞ் செல்வர் தாமே' என்பது புராண அடியாகும்.

இத்திருத்தலத்து இறைவனின் திருநாமம் 'ஊர்த்துவ தாண்டவர்' ஆகும். அம்மையின் பெயர் 'வண்டார் குழலியம்மை'. தீர்த்தம் 'முத்தி தீர்த்தம்' என அழைக்கப்படுகிறது. தல விருட்சம் ஆல், பலா ஆகியவைகளாகும். இங்குள்ள மன்றம் இரத்தின சபை என அழைக்கப்படுகிறது. பழையனூரோடு சேர்த்தே இத்திருத்தலம் வழங்கப்படுகிறது. ஆலமரக் காடும் அதற்கடுத்து பழையனூர் ஊராகவும் உள்ளது. இத்திருத்தலம் முன்னாள் தொண்டை நாட்டின் 16வது திருத்தலம். இத்திருத்தலம் சென்னைக்குத்தெற்கேதிருவாலங்காடு என்றழைக்கப்படும் புகைவண்டி நிலையத்திற்கு வடகிழக்கே உள்ளது. இத்திருத்தலம் மூவராலும் பாடல் பெற்ற தலமாகும். இங்குறையும் இறைவர் செய்யாள் வழிபட நின்றார், தீராதவல்வினை நோய் தீர்ப்பார் என்று சொல்லப்படுகின்ற பெருமைகளை உடையவர் ஆவார். அவரடி பணிந்து நாமும் நலம் பல பெறுவோம். ★

# திருமலைக் கல்வெட்டுகளிலிருந்து.....



திருமலைக்கோயில்

“வேங்கடமே விண்ணோர் தொழு வதுவும்
மெய்மையால் வேங்கடமே. மெய்வினை நோய் தீர்ப்பதும் வேங்கடமே”

என்று திருமழிசையாழ்வார் போற்று கின்றார் திருமலை எம்பெருமானைத் தம் பாசுரத்தில்.

இத்தகையப் பல சிறப்புக்களைக் கொண்ட இத் திருத்தலத்தின் செய்திகளைக் கல்வெட்டுகளின் மூலம் அறியலாம். இத்திருக்கோயிலின் கல்வெட்டுகள் தமிழில்தான் அதிக அளவிலும், வடமொழி, தெலுங்கு, கன்னடம் முதலான மொழிகளில் குறைவாகவும் இங்குக் காணப்படு கின்றன.

இத்திருமலையின் சிறப்பை நான்கு வேதங்களும் 18 புராணங்களும் இதி காசங்களும் பலவாறுக எடுத்து இயம்புகின்றன.

கி. பி. 2ம் நூற்றுண்டு முதல் 3ம் நூற்றுண்டு வரை சந்திர சோழ மன் னர்களைத் தொடர்ந்து சுதர்மன், ஆகாசராஜன் தொண்டைமான் சக் கரவர்த்தியால் திருப்பதி ஆலயம் சிறப்புற உருவாகியது.மேலும் சோழ பரம்பரையில் தொண்டைமான் இளந்திரையன் காலத்தில் 24 கோட்டங்களாக அதனைப் பிரித் துத் திருவேங்கடக்கோட்டம் எனத் தனித்தன்மை பெற்று விளங்கிற்று.

கி. பி. 4-5ஆம் நூற்றுண்டுகளில்- ‘களப்பிரர்’ காலமாதலால் வழிபாடு கள் ஸ்தம்பித்தன.இதனுல் பூசல்களும் ஏற்பட்டு வைஷ்ணவ பக்தி நெறி, பிற மதக்கலவரங்களால் செயல் இழந்தன.

கி. பி. 6ஆம் நூற்றுண்டில் பல்லவ மன்னர்களின் நல்லாட்சிக் காலங் களில் ஆழ்வார்களால் போற்றப் பெற்றது. அதில் 10 ஆழ்வார்கள் பல பாசுரங்களால் போற்றித் துதித் தனர். வைஷ்ணவ ஆசார்ய பரம் பரையில் வந்த நாதமுனிகள், உய்யக்


திரு. S. நாராயணசுவாமி எம்.ஏ. பி.எட்.,

திருவாவடுதுறை.


கொண்டார், மணக்கால் நம்பி முத லானோரும் பின்னர் வந்த கம்பர், அருணகிரி, சிவப்பிரகாச சுவாமிகள், புரந்தரதாசர், தியாகப் பிரம்மம், ஆதிசங்கரர், இராமானுஜர், மத்து வர் இவர்களாலும் இன்னும் பெருமை சேர்க்கப்பட்டது.

கி. பி. 7ஆம் நூற்றுண்டில் நாத முனிகளால், பிரதேச மன்னர்களின் மான்யங்களோடு நந்திவர்மப் பல்ல வன் காலத்தில் ஆலய நந்தாவிளக்குத் திருப்பணிக்காக ஏராளமான பொற் காசுகள் கொடுக்கப்பட்ட செய்தி தெரிய வருகிறது. தொடர்ந்து கி. பி. 8ஆம் நூற்றுண்டில் ஏழுமலை மூல வர்பற்றியசர்ச்சை ஏற்படவே யாதவ மன்னர் வைஷ்ணவ நெறியினைப் பாதுகாத்தார்.



திருப்பதியிலிருந்து திருமலைத்தோற்றம்
திரு. ஜி. வி. ரமணாராவ்

கி.பி. 828ல் திருமலை மூலஸ்தானம் புதுப்பிக்க நேர்ந்தமையால் திருவிளங்கோயில் ஏற்படுத்தித் தற்காலிக பூஜைகள் நடந்தன.

பல்லவ மன்னர்கள், யாதவ சிற்றரசர்கள் பங்கு கொண்டமையால் ஆலயம் சிறப்புப் பெற்றது. சோழ பரம்பரையைச் சேர்ந்த 'சாமாவை' எனும் பெண்ணரசி 3 ஆயிரம் குழி நிலத்தையும், 47 களஞ்சுப் பொன்னையும் திருமலைப் பெருமான் கோயிலுக்கு வழங்கினாள்.

10ஆம் நூற்றாண்டில் கி. பி. 952ல் பராந்தகச் சோழரின் ஆட்சியில் தொண்டை மண்டலம் சிறப்புற்றதால் அதிக அளவில் பொன்னாபரணங்களைத் தமது ஆட்சிக் காலத்தில் வழங்கினான். கணக்கில்லாமல் பொன்னும் மணியும் வந்து சேர்ந்தமையால் சைவர்களும் வைஷ்ணவர்களும் தங்களது பேதங்களை விட்டு, திருமாலின் திருவடியைப் போற்றினர். இதனால் தஞ்சைச் சோழர்கள் சைவர்களாய் இருந்தாலும் திருமலைக்குச் சொத்துக்களைக் கொடுக்க முன் வந்தனர்.

11ஆம் நூற்றாண்டில், தென் பகுதியில் சோழர்களின் ஆட்சிக் காலம் பொற்காலமாகத் திகழ்ந்தமையால் தஞ்சையினை ஆண்ட உலகப் புகழ் பெற்ற ராஜராஜ சோழனின் காணிக்கைகளோடு சோழ அரசி 'அம்மனார்' என்ற மர்தரசி 57 கழஞ்சுப் பொன்னும் திருமலை ஆலயத்திற்கு அளித்தனள். கி. பீ. 1016ல் சோழப் பேரரசில் வாழ்ந்த பிராமணர் ஒருவர் 26 கழஞ்சுப் பொன் அளித்தார் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

13ஆம் நூற்றாண்டில் யாதவ, சாளுவ, காகதீய, ஹொய்சாள மன்னர்கள் இத்திருக்கோயிலைப் போற்றி நிலங்களும் பொருள்களும் கொடுத்தனர். கி. பி. 1130ல் ஸ்ரீஇராமனுஜர் திருப்பதி ஆலயத்தின் நிர்வாகம், வழிபாடு முதலியவற்றை சீர்படுத்தி 'ஜீயர்களை' நியமித்து ஆலயத்தின் நிர்வாகத்தை அவர்களிடம் ஒப்படைத்தார்.

13ஆம் நூற்றாண்டில் நெல்லூர் கடப்பை வரை கைப்பற்றிய சடையவர்ம சுந்தர பாண்டியன் 1251ல் பல பொற்கலங்களைக் காணிக்கையாகத் தந்தான். முதன்முதலாகத் திருக்கோயிலின் விமானத்திற்கு (கருவறையின் விமானம்) 'வீரநரசிம்ம யாதவராயர்' என்பவன் 1260ல் பொன் வேய்ந்தான்.

1294ல் டெல்லி பாதுஷாவால் (அலாவுதீன்) சூறையாடப்பட்டும் மேலும் தென்னாட்டின் பல பகுதிகளிலிருந்தும் பொன்னாபரணங்கள் எல்லாம் கவரப் பெற்றன.

14ஆம் நூற்றாண்டில் மொகலாய மன்னர்கள் தென்னகக் கோயில்களில் உள்ள விலை மதிக்க முடியாத சிலைகளிலும் ஆபரணங்களிலும் தங்கள் கவனத்தைச் செலுத்தினர். 1325ல் தென்னாட்டின் பெரும்பகுதி முகம்மதிய அரசனான 'துக்ளக்' வசம் சேர்ந்தது. அச்சமயம் திருவருளால் முகமதிய கொள்ளைகளுக்கும், சூறையாடுதலுக்கும் முற்றுப் புள்ளி வைத்தாற்போல 1336ல் விஜயநகரப் பேரரசு தோன்றிற்று. இதனால் திருமலை ஆலயம் புதுபலம் பெற்றுத் திகழ்ந்தது.

1356ல் விஜயநகர மன்னரான சாளுவமங்கதேவர் ஆட்சிக் காலத்தில் திரும்பவும் திருக்கோயிலுக்குப் பொன் வேய்தல் திருப்பணி நிகழ்ந்தது.

முகலாய மன்னர்களின் திருக்கோயில் சூறையாடலிருந்து திருவரங்கப் பெருமாள் (உற்சவமூர்த்தி) 50 ஆண்டு காலம் திருமலையில் காக்கப்பட்டு, 1371ல் மீண்டும் ஸ்ரீரங்கம் திரும்பலானார். அச்சமயம் திருப்பதியில் வழிபாடு ஸ்தம்பித்தது.

இருப்பினும் விஜயநகர சாம்ராஜ்யம் திருமலைத் தெய்வம் குலதெய்வமானபடியால் பொருள் வளம் பெருகத் தொடங்கிற்று.

இரண்டாம் 'ஹரிஹரர்' 1404ல் ஸ்ரீ வேங்கடேஸ்வராய நம: என்ற மந்திரத்தினைப் பதிக்கச் செய்த நாணயத்தினை வெளியிட்டார். ஸ்ரீ வேங்கடாஜலபதிக்கு சுப்ரபாதம், நாலாயிர திவ்யப் பிரபந்தம் முதலியன அவன் சந்நிதியில் பாடும் சம்பிரதாயமும் அவன் காலத்தில் அமுலாக்கப்பட்டன. ★

# அனந்தசயனத்து அண்ணல்

பாரதத்தில் கண்களேயும் கருத்தையும் ஒருங்கேக் கவரும் இடம் காஷ்மீர் என்று சொல்லுகிறுர்கள்; இருக்கலாம். ஆனல், மேற்குக் கரையோரமாக ஒருவர் திருவாங்கூருக்கு— கேரள ராஜ்யத்துக்கு விஜயம் செய்தால் போதும்! காஷ்மீரில் காண முடியாத எழில் வாய்ந்த இயற்கைக் காட்சிகள், மேகம் தவழும் குன்றுகள், பச்சைப் பசேலென்ற தோட்டம் துரவுகள், பயிர்கள் மலிந்த வயல்கள், பள்ளத்தாக்குகள், அருவிகள், பீடபூமிகள், உப்பங்கழிகள், கடல் அயல் ஏரிகள் இவைகளேக் காணலாம்.

8300 அடி உயரமுள்ள யானே மலேயும், 6200 அடி உயரமுள்ள பொதிய மலேயும், ஏலக்காய் மலேயும் இங்கே வெகு பிரபலமானவை! கேரளக் காடுகளில் மிகுந்த உபயோகமுள்ள பொருள்கள் கிடைக்கின்றன. இங்கே தேக்கு மரக்காடுகள் விசேஷம். தென்னே, பலா, மிளகு, யானேத் தந்தம், காப்பிக் கொட்டை, தேயிலே, ஏலக்காய் முதலியவை இந்நாட்டில் மிக்க அதிகமாக விளேகின்றன. பிற நாடுகளுக்கும் வருடந்தோறும் ஏராளமாக ஏற்றுமதியாகின்றன.

அரபிக்கடல் ஒரு புறம் அணேத்துவர, 'மேற்குத் தொடர்ச்சி மலே தழுவிச் செல்ல, கேரளம் பாரத நாட்டின் தென் மேற்குக் கோடியில் சௌந்தர்ய சிகரமாக — பாரதப் பூமியின் பூங்காவாகத் திகழ்கிறது.

கேரள இராஜ்யத்தின் தலேநகரம் திருவனந்தபுரமாகும். இங்குத்தான் இந்நாட்டின் முன்னுள் அரசரும் இராஜப் பிரமுகருமான சித்திரைத் திருநாள் பால ராமவர்மா மஹா ராஜாவும் அவரது குடும்பத்தினரும் வசித்து வருகிறுர்கள். இங்குள்ள அனந்த பத்மநாப ஸ்வாமி, அரசர்களுடைய குடும்ப தெய்வம்.

பத்மநாப ஸ்வாமி ஆலயம் கோட்டையின் மத்தியில் உள்ளது. இ. பி. 1750 ஆம் ஆண்டில் ராஜராஜ மார்த்தாண்ட வர்மா என்ற அரசர் பத்மநாப ஸ்வாமி முன்னுல் தமது வாளே வைத்து, தமது ராஜ்ய முழுமையும் அவரடியில் சமர்ப்பித்துத் தம்மை அவரது சேவகளுகவும், பிரதிநிதியாகவும் அறிவித்து விட்டு வீடு திரும்பினுர் எனக்கூறும் சரித்திரம். அன்று முதல் இன்று வரை கேரள ராஜ்யம் முழுமையும் பத்மநாப ஸ்வாமியுடையது ஆயிற்று என்பர். மன்னர்கள் பத்மநாப தாஸர்கள் என்ற பட்டப் பெயரோடு திருவாங்கூர் அரசர்கள் இறைவன் தரப்பில் நாட்டை ஆண்டு வந்தார்கள்.


சன்மிஷ்டை
தஞ்சை.




ஸ்ரீ பத்மநாபசுவாமிகோயில் — திரு. வி. முத்துராமன்

சரித்திரப் பாதையில் :

திருவாங்கூரின் ஆதிகாலத் தலே நகர்களின் சரித்திரம் மிகப் பழமையானதும் சுவாரஸ்யமானதுமாகும். புராண—இதிகாலங்களின் கூற்றுப் படி கொச்சியை அடுத்துள்ளதும்

தென்னஞ்சோலை நிறைந்ததும் எவ்வித முக்கியத்துவமில்லாததுமான 'திரிக்காக்கரை' என்ற கிராமமே மஹாபலியின் தலைநகரமாயிருந்ததாம்.

வாமன மூர்த்திக்கு அர்ப்பணிக்கப்பட்ட கோயில்கள் வெகு சொற்பம். கொச்சி நகரத்திற்கு ஆறு மைல் தூரத்தில் உள்ள இந்தத் திரிக்காக்கரையில் வாமன மூர்த்தியான விஷ்ணுவுக்கு அர்ப்பணிக்கப்பட்ட புராதனக் கோவிலொன்றுள்ளது.

ஓணத்தின்போது இக்கோயிலில் சேவிப்பது மிகப் புண்யமாகக் கருதப்படுகிறது. தவிரவும், இங்குதான் மஹாபலியின் ஆயுதச் சாலையும், பாண்டவர்களைக் கொல்லுவதற்கு கௌரவர்கள் கட்டிய அரக்கு மாளிகையின் சிதிலங்கள் எனக்கூறும் மலைக் குகைகளுமுள்ளன.

இக்குகையிலிருந்து பெயர்த்தெடுக்கப்படும் துண்டுகள் மருந்துக்காக இன்றும் உபயோகப்படுகின்றன. சுமார் நாற்பத்தைந்து வருஷங்களுக்கு முன் இங்குள்ள கனிகளைப் பரிசோதித்தபோது இதில் அதிகமாக இரும்பு கலந்திருப்பதாக அறிவிக்கப்பட்டதாம்.

திரிக்காக்கரையிலிருந்து இருபது மைல் தூரத்தில் உள்ளதும், தற்காலத்தில் "கிராங்கனூர்" என்று வழங்கி வருவதுமான 'திருவஞ்சிக் களந்தான்' சரித்திரத்தில் இடம் பெற்றுள்ள முதல் தலைநகரமாகும். கிராங்கனூர் ஒரு சிறு நகரம். கொச்சி நகரத்திற்கும், ஜில்லாவின் மற்றப் பகுதிகளுக்கும் எல்லா பருவ காலங்களிலும் கால்வாய் மூலம் படகுப் போக்குவரத்துச் செய்யக் கூடிய மார்க்கத்தில் உள்ளது.

புராதனமான ஒரு பகவதி கோயிலும், அர்ச். தோமையரால் கி. பி. முதல் நூற்றுண்டில் நிர்மாணிக்கப்பட்டதென்ற கீர்த்தி வாய்ந்ததுமான ஒரு கிறிஸ்தவக் கோயிலும் இன்றைய கிராங்கனூருக்குப் பிரதான அம்சங்களாகும்.

வைஷ்ணவ கிரந்தமான பிரபந்தம் பாடிய குலசேகர ஆழ்வார் என்று கூறப்படும், குலசேகரப் பெருமாளின் வழி வந்தவர்களும் முன்னேர்களும் ஆண்ட நகரம் கிராங்கனூர் என்னும் இந்தத் திருவஞ்சிக்களமே யாகும். கிறிஸ்து பிறப்பதற்கு முன்பிருந்தே இந்தத் திருவஞ்சிக்களத்திற்கு எகிப்து, பாபிலோன், ரோமாபுரி, சீன முதலிய நாடுகளிலிருந்து வரும் வியாபார யாத்திரிகர்களின் தொடர்பு உண்டு.

கி. பி. 68 அல்லது 69ல் ரோமானியர்களால் சித்ரவதை செய்யப்படுவதிலிருந்து தப்புவதற்கு யூதர்களுக்குப் புகலிடமாய் அமைந்ததும் இவ்வூரே என்பது இனிது விளங்கும். தவிரவும், பெருமாள் வம்ச மன்னர்களின் தலைநகராக "இரணியல்" (Eraniyal) என்றழைக்கப்படும் 'ரணசிங்க நல்லூ'ரும் சரித்திரத்தில் குறிப்பிடப்படுவது கண்கூடு.

இது திருவாங்கூரின் தென்பகுதியில் உள்ள ஒரு சிற்றூராகும்; தற்சமயம் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ளது. இங்குள்ள பழங்கால அரண்மனையில் ஒரு கருங்கல் கட்டில் உள்ளது. இதில்தான் பிரசித்தி பெற்ற சேரமான் பெருமாள் தூங்கினர் என்பர். இவர் பள்ளியறையிலிருந்து மாயமாய் மறைந்து சுவர்க்கம் சேர்ந்ததாக இவரைப் பற்றிய ஓர் ஐதீகம் நிலவி வருகிறது.

நாளடைவில் திருவாங்கூரின் ஐக்கியம் சீர்குலைந்தது. குறுநில மன்னர்கள் சிறுசிறு ராஜ்யங்களை அமைத்து தத்தமக்குரிய இடங்களில் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கினர். இப்படி அமைந்த தன்னரசுகளில் வடக்கே ஜாமரினல் ஆளப்பட்ட கோழிக்கோடு (Calicut)ம் மத்திய நாட்டில் கொச்சி மகாராஜாவின் ஆளுகைக்குட்பட்ட பிரதேசமும், தெற்கில் வேணாட்டுத் தலைநகரான பத்மநாபபுரத்திலிருந்து ஆண்ட மஹாராஜாக்களின் பகுதியும் பிரதானமானவை!

1498-ல் கள்ளிக்கோட்டையில் வாஸ்கோடிகாமாவின் வருகையைத் தொடர்ந்து ஐரோப்பியக் குடியேற்ற வல்லரசுகளால் ஜாமரின் ராஜா, தன் சுதந்திரத்தை இழந்தார். அதன் பயனுக அவருக்குப் பென்ஷன் கொடுக்கப்பட்டது. அவரது தலைநகரம் மலபார் ஜில்லாவின் தலைநகராகியது. ஆனல், ஜாமரின் கதி



பரசுராமர் கோயில் - திருவல்லம்.

கொச்சி மகாராஜாவுக்கு ஏற்படவில்லை.

ஆனுலும், படிப்படியாக, போர்ச்சுக்கீஸிய, டச்சு, பிரிட்டீஷ் ஆதிக்கங்களின் செல்வாக்கால் மஹாராஜா தன் அரண்மனையைத் 'திருப்புனித்துறை'க்கு மாற்றிக் கொண்டு கொச்சி வளைகுடாவின் மேற்குக் கரையில் உள்ள எர்ணுகுளத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தார்.

திருவாங்கூர் இராஜ்யத்தின் புராதனப் பெயர் வேணுடு. 18ஆம் நூற்ருண்டின் மத்தியில் மார்த்தாண்ட வர்மன் காலத்தில் திருவனந்தபுரம் ஜில்லாவின் வடக்கெல்லையில் பாரூர் (Parur), மூணர் (Munnar) வரை இவ்வேணுடு வியாபித்தது. யுத்த வீரனும், ராஜ தந்திரியும், தேச பக்தனுமான இராமய்யன் இந்தப் பணியில் மார்த்தாண்ட வர்மனுக்கு உறுதுணையாக இருந்தார். இவருடைய ஆலோசனைப்படித்தான், ராஜ்யத்தைத் திருவனந்தபுரத்தில் அனந்த சயனத்திலிருக்கும் ஸ்ரீ பத்மநாப ஸ்வாமிக்கு அர்ப்பணம் செய்தார்.

அதோடு தானும் தன் சந்ததியார்களும் ஸ்ரீ அனந்த பத்மநாப ஸ்வாமியின் தாஸர்களாக இருந்து இந்த இராஜ்யத்தைப் பரிபாலித்து வருவதாகச் சபதமும் செய்தார். திருவாங்கூர் ராஜ்யம் பத்மநாப ஸ்வாமியின் சொந்த சொத்தானபடியால் திருவனந்தபுரமும் அதன் தலைநகராகியது. அரசரும் தமது இருப்பிடத்தைப் பத்மநாபபுரத்திலிருந்து திருவனந்தபுரத்திற்கு மாற்றிக் கொண்டார் எனக்கூறும் சரித்திரம்.

**ஆலயத்தின் மகிமை :**

திருவனந்தபுரம் ஆலயம் மிகப் பழமையானது. பாரத நாட்டின் பல பாகங்களில் இருந்தும் யாத்திரிகர்கள் வந்து போவது கண்கூடு. இப்பொழுது ஆலயம் இருக்குமிடம் ஆதியில் அனந்தங்காடாக இருந்தது. அந்தக் காட்டில் ஈழவ மரபைச் சேர்ந்த ஓர் ஏழைக்குடியானவனும் அவன் மனைவியும் வசித்து வந்தனர். அத்தம்பதிகளுக்குக் குழந்தைகள் இல்லை. ஆனல், விஷ்ணு மூர்த்தியினிடம் பக்தி இருந்தது; மிக்கப் பாசம் இருந்தது.

தம்பதிகள் இருவரும் நாடோறும் பயிர்த் தொழில் செய்து ஜீவித்து வந்தனர். ஒரு நாள் அவர்கள் வயலில் வேலை செய்து கொண்டிருந்த போது ஈழவனின் மனைவி குழந்தையொன்றின் அழுகுரலைக் கேட்டுச் சுற்று முற்றும் பார்க்கவே தெய்வீகச் சின்னங்களோடு கூடிய ஆண் குழந்தையொன்று கைகளையும் கால்களையும் உதறி அழுவது தென்பட்டதாம்!

அவள் ஓடோடியும் வந்து குழந்தையை எடுத்து உச்சிமோந்து மார்பில் அணைத்து அக்குழந்தைக்குப் பாலூட்டிச் சீராட்டி அருகில் இருந்த இலுப்பை மரத்தின் பரந்த நிழலில் அதைவிட்டு வைத்தாள். அவள் குடிசைக்குப் போய் வருவதற்குள் வானம் இரண்டு மழை பெய்யத் தொடங்கியது; காற்றும் மிக வேகமாக வீசத் தொடங்கியது.

இதற்குள் ஒரு பெரிய நாக ஸர்ப்பமானது குழந்தையை அம்மரத்தின் பெரிய பொந்துக்குள் எடுத்துச் சென்று தன் படத்தால் அதை மழை, காற்றினின்றும் காப்பாற்றியதாம். குடிசைக்குச் சென்று வந்த ஈழவனின் மனைவி அதைப் பார்த்துத் திடுக்கிட்டு, கணவனை அழைத்துக் காட்டவே, ஸர்ப்பம் குடை பிடிக்க விளங்கும் இக்குழந்தை விஷ்ணு மூர்த்தியாகத்தான் இருக்க வேண்டுமென்று எண்ணி, அவர்கள் நாடோறும் அதற்குப் பாலும் கஞ்சியும் நைவேத்தியமாக அளித்து வழிபட்டு வந்தார்கள்.

ஈழவ தம்பதிகள் பக்தி நாளடைவில் மன்னனுக்கு எட்டவே, அரசன் அந்த இடத்தில் ஓர் ஆலயம் கட்டினன். நாளடைவில் அக்குழந்தை பல அற்புதங்களைச் செய்து மறைந்து



சேரமான் பெருமாள் துயன்ற கருங்கல் கட்டில்

விட்டதென இங்கு கர்ண பரம்பரையாய் சொல்லப்பட்டு வருவது வெளிப்படையாகும்.

தவிர 'அனந்த சயன மகாத்மிய'த்திலே கூறப்படுவதாவது திவாகரமுனி என்னும் துளு சன்னியாசி ஆதர்த்த தேசத்தில் தவம் செய்து கொண்டிருக்கும்போது விஷ்ணு பகவான் இரண்டு வயது கோமள பாலனின் வடிவில் அவர் முன்னிலையில் தோன்றினர். அக்குழந்தையிடம் பேரார்வம் கொண்ட முனிவர் குழந்தையைத் தன்னோடு தங்கும்படி வேண்டினர். குழந்தையும் தனக்கு அவமானம் ஏற்பட்டால் ஒரு கணம் கூடத் தங்க மாட்டேன் என்று கூறிற்று; முனிவரும் அப்படியே ஒப்புக் கொண்டார்.

குழந்தையின் சிறு குறும்புகளை எல்லாம் கண்டு மகிழ்ந்து மனதாரக் குழந்தையை நேசித்து வந்தார்; குழந்தையும் அவரிடம் அன்பாக நடந்து கொண்டது. ஒரு நாள் முனிவர் பூஜை செய்து கொண்டிருக்கும்

பொழுது, குழந்தை 'சாளக் கிராமம்' என்னும் விஷ்ணு மூர்த்தியை எடுத்துக் கடித்து விளையாடிற்று; முனிவரும் கடுங்கோபம் கொண்டு குழந்தையைத் திட்டினார்; புறங்கையால் தள்ளினார்.

அதன் பயனாகக் குழந்தை முன் நிபந்தனைப்படி உடனே மறைந்து விட்டது. எனினும் ஓடும்போது குழந்தை முனிவரிடம் இனிமேல் தன்னைப் பார்க்க விரும்பினால், 'அனந்தன் காட்டிற்கு' வர வேண்டுமென்று கூறி மறைந்துவிட்டது; அப்பொழுது தான் முனிவருக்கு உண்மை விளங்கிற்று.

குழந்தையின் பிரிவினால்—அதன் மேல் வைத்த கடும் பாசத்தினால் துக்கம் நிறைந்த இதயத்துடன் முனிவர், குழந்தை ஓடிய திசையை நோக்கி உணவும் உறக்கமும் இன்றிப் பின் தொடர்ந்து சென்றார். இறுதியில் கடலோரத்திலுள்ள ஒரு ஆரண்யத்தில் ஒரு பெரிய இலுப்பை மரப் பொந்தில் குழந்தையைப் பார்த்தார்; அம்மரம் திடீரென்று நிலத்தில் வீழ்ந்தது; இறைவன் 'அனந்த சயனத்து அண்ணலாக' முனிவருக்குக் காட்சியளித்தான்.

ஆனால், அவ்வடிவத்தின் தலை திருவல்லத்திலும், பாதம் திருப்பாப்புரத்திலும், உடல் திருவனந்த புரத்திலுமாக நீண்டு கிடந்தது. இறைவனின் இப்பெரிய வடிவத்தை வலம் வர முடியாத தன் இயலாமையைக் கூறி வருந்தினார் முனிவர். அவர் வேண்டுகோளுக்கிணங்க இறைவன் தன் வடிவை, முனிவரின் யோக தண்டைப்போல,மூன்று அளவுக்குள் சுருக்கிக்காட்ட வேண்டினார்.விஷ்ணுமூர்த்தியும் அவ்வாறே அருள் புரிந்தார்; முனிவரும் இறைவனை கண் குளிர—மனங்குளிர வழிபட்டார். அதனால், கோயிலிலே முனிவரின் வழி வந்தவரே அதாவது துளுவ பிராம்மணர்களே பூஜைகள் செய்கிறார்கள். இதுவே, 'அனந்தசயன' மகாத்மீயத்தில் கூறப்படும் செய்தியாகும்.

தவிர, வில்வ மங்கலத்துச் சாமியாரைப் பற்றியும் பிறிதோர் செய்தி கூறப்படுகிறது. அதாவது வில்வ மங்கலச் சாமியார் நம்பூதிரி குலத்தில் தோன்றிய சந்நியாசியாவர். இக்கதைக்கும் திவாகர முனியின் கதைக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு.

வில்வ மங்கலம் சாமியார் இறைவனை அனந்தன் காட்டில் பள்ளி கொண்ட பெருமாளாகக் கண்டார். அச்சமயம் பகவானுக்கு நிவேதிக்க வேறொன்றும் கிடைக்காமையால், அருகில் கொப்பும், கிளையுமாக நின்றிருந்த மாமரத்திலிருந்து சில மாவடுக்களைப் பறித்து, ஒரு முற்றிய தேங்காயின் சிரட்டையில் வைத்துப் பகவானுக்கு நிவேதனம் செய்தார். ஆனால், இப்பொழுது தங்கத்தினால் செய்யப்பட்ட சிரட்டையில் வைத்து நிவேதனம் நாள்தோறும் செய்யப் பட்டு வருகிறது; உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.

அதனால், கேரள ராஜ்யமெங்கும் வருஷம் பூராவும் மாமரங்கள் பச்சைப்பசேலெனக் காய்த்துக் குலுங்குகின்றன. 'படிஞாறுமடம்' அருகிலுள்ள கிருஷ்ணன் கோவில் பக்கம் 'வில்லுவ மங்கலம்' ஸ்வாமிகள் சமாதியுள்ளது; இன்றும் காணலாம்.

ஸ்வாமியின் பெயர் அனந்த பத்மநாப ஸ்வாமி ஆலயம் என வழங்கப் பட்டு வருகிறது. ஆலயம் கோட்டையின் மத்தியில் மன்னர் பாதுகாப்பில் இருந்து வருகிறது. கோயிலின் ராஜ கோபுரம் மிகப் பிரம்மாண்டமானது. 15ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கட்டப்பட்டதாகக் கூறுவர்.

பன்னீராயிரம் சாளக்கிராமம் வரவழைத்து, கடுசர்க்கரை யோகத்தில் இப்பொழுதிருக்கும் சயன விக்கிரகம் செய்யப்பட்டு பிரதிஷ்டை செய்யப் பட்டது; இக்காலத்தில்தான் ஸ்ரீ பலிப்புரையும் கட்டப்பட்டது. தினந்தோறும் நாலாயிரம் கல்லாசிரியமாரும், ஆறாயிரம் கூலியாட்களும், நூறு யானைகளும் சேர்ந்து ஏழு மாதங்களில் கட்டப்பட்டதாகச் சரித்திரம் கூறுகிறது.

ஏழு நிலைகளைக் கொண்ட கோபுரக் கதவுகளிலும், உத்தரங்களிலும் மிக அருமையான மரச்சித்திர வேலைப் பாடுகள் அமைந்துள்ளன. கேரள சிற்பக்கலைக்கு இவையொரு சிறந்த எடுத்துக் காட்டு எனலாம். கோவிலுக்குள் ரதி, மன்மதன், துர்க்கை, வேணுகோபாலன் போன்ற பல சிற்பங்கள் உள்ளன.

கோயிலின் கர்ப்ப கிருகத்தின் மீதுள்ள விமானம் மலையாளத்துக் கோயில்களிலுள்ள கூருருளைக் கோபுர வடிவில் காணப்படுகிறது.அதன் மேல் மிக உயர்ந்த செப்புத் தகடுகள் வேயப்பட்டுள்ளன.ஆலயத்தின் முன் கோபுர வாயில் எப்பொழுதும் மூடப் பட்டிருக்கும்; காரணம் தெரியவில்லை.

திருவிழாக் காலங்களில்தான் திறந்து வைக்கப்பட்டிருக்கும் எனச் சொல்லுகிறார்கள். பக்கத்திலிருக்கும் மதிற்சுவரில் உள்ள ஒரு வாயில் வழியாகத்தான் உள்ளே செல்ல வேண்டும்; வேறு வழி இல்லை என்பது குறிப்பு.

முதற் பிராகாரம் மிகப் பெரிது. அங்கிருந்து வடக்கு வாயில் வழியாகச் சென்றால் மூல ஸ்தானத்தை எளிதில் அடையலாம். கர்ப்பக்கிரகம் உயர்ந்த மண்டபத்தின்மீது உள்ளது. மூலவரை மூன்று தலை வாயில்கள் வழியாகத்தான் சேவிக்கலாம். ஏனெனில், பத்மநாப ஸ்வாமி மூல விக்ரஹம் மிகப் பெரிது.

பெருமாள் ஆதிசேஷன்மீது பள்ளி கொண்டிருக்கிறார், ஸ்ரீ ரங்கத்தைப் போல! இதனால்தான் இந்தத்தலம் "அனந்த சயனம்" எனப்படுகிறது. இடது புறம் தலைவாயிலில் திருமுடியையும், மத்திய வாயிலில் திருநாபியையும், கோடி வாயிலில் திருவடியையும் சேவிக்க வேண்டும். மத்திய வாயிலில் நாபிக்கு முன்னால் தனிச் செம்பொன்னால் செய்த உற்சவ

விக்ரஹம் இருக்கிறது; விக்ரஹம் சிறிது தான். ஆனால், அழகு சொட்டும் பால் போன்ற கலை பொருந்தியது.

மேலும், அனந்த பத்மநாப ஸ்வாமி சந்நிதிக்கு முன்னால் ஓர் ஒற்றைக்கல் மண்டபம் உள்ளது. அம்மண்டபம் 20 அடி நீளம், 20 அடி அகலம், இரண்டே முக்கால் அடி உயரமுள்ள ஒரே கருங்கல்லால் ஆனது. இங்கு தான் உற்சவருக்கு நாடோறும் பூஜைகள் நடைபெறும்; ஆனால், மூலவருக்குத் திருமஞ்சனம் இல்லை; அர்ச்சனை மட்டும் திருவடியில் செய்யப்படுகிறது.

இக்கோயிலில் அதிகாலை நான்கு மணிக்கெல்லாம் நடை திறக்கப்பட்டு உற்சவமூர்த்திக்குத் திருமஞ்சனம் நடைபெறும். மண்டபத் தூண்களில் பல எழில் வாய்ந்த சிற்பங்கள் உள்ளன. ஹனுமான், கருடன் வடிவங்கள் இதில் பெரிய ஆகிருதியில் தூணில் செதுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளுக்கு நாடோறும் தனிப் பூஜைகள் உண்டு; மிக்க வரப்பிரசாதி என்பது வெகு பிரசித்தம்.

இவ்வளவு பெரிய ஆலயத்தினுள் ஒரு மின்சார விளக்கு கூட இல்லை. எண்ணெய் திரிபோட்ட விளக்குகள் தான் இங்குத் தனிவிசேஷம். அதனால் யாத்திரிகர்கள் பகலில் சென்று வருவதுதான் விசேஷம்; இரவில் அவ்வளவு ரசிக்க முடியாது என்பது குறிப்பு.வாசலில்துப்பாக்கிப் பிடித்த சிப்பாய்கள் பராக் கொடுக்கிறார்கள். யாவரும் தாராளமாக உள்ளே சென்று பெருமாளைத் தரிசித்து வரலாம்.

ஆனால், நம் தமிழ்நாட்டுக்கோயில்களைப் போல் குளிக்காமல், சட்டை, தலைப்பாகையுடன் இங்குள்ள கோயில்களுக்குள் செல்ல அனுமதிக்கப்பட மாட்டார்கள்; ஆசாரத்துடன் செல்ல வேண்டும். அனந்த சயன தரிசனத்திற்கு நேரம் நிச்சயித்து இருக்கிறார்கள். காலையில் எட்டு மணிக்குமுன் யாவரும் போய் ஸ்வாமி தரிசனம் செய்யலாம்.

அதற்குப் பின் 'எழுந்நளத்து'— அதாவது பிரதி தினமும் பத்மநாப தாஸரான திருவாங்கூர் மன்னரும் முன்னாள் ராஜப்பிரமுகருமான சித்திரைத் திருநாள் மஹாராஜா இக் கோயிலுக்கு மடியுடன் வந்து தரிசனம் செய்து திரும்புவார். இத்தரிசனம் முடிய சுமார் பத்தரை மணியாகும்; இதற்குப்பின் யாவரும் போகலாம்.

முற்காலத்தில் இக்கோயிலில் அன்னதானங்கள் நடந்து வந்தன. அதாவது காலையில் 'எழுந்நளத்துக்கு முன்' கோயில் நான்கு பிராகாரங்களையும் சுற்றிப் பார்த்தால் ஆச்சரியப்படுவோம். பதினாயிரக்கணக்கான பிராமணப் பெரியார்களும், குழந்தைகளும், பெண்களும் முகமலர்ச்சியுடன் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் காட்சி நம்மைப் பிரமிக்கச் செய்யும்.

இக்கோயிலில் வருஷ முழுவதும் உற்சவந்தான். விசேஷமாக ஆறு வருஷங்களுக்கு ஒரு முறை கொண்டாடப்படும் 'முறை ஜபம்' உற்சவம் பெயர் போனது. நூற்றுக் கணக்கான 'நம்பூதிரிப் பிரதானிகள்' பங்கு கொண்டு நடத்தும் யாகம் போன்ற உற்சவம் இது.

அனந்த பத்மநாப ஸ்வாமிக்குத் திருமுடி ஸ்தானம் 'திருவல்லம்' என்பர். இது திருவனந்தபுரத்திலிருந்து நான்கு மைல் தொலைவிலுள்ளது. ஆலயம் இரண்டு பிராகாரங்களுடன் கூடியது. பரசுராமர், பிரும்மா, சிவன் ஆகியோருக்குச் சந்நிதிகள் உள்ளன. பரசுராமர் சந்நிதி வடக்கு நோக்கிக் காட்சியளிக்கிறது.

கட்டிடம் கீழிருந்து மேல் வரை கருங்கல்லால் கட்டப்பட்டு, செங்கல் விமானத்தோடு விளங்குகிறது. பரசுராமர் கோடரி, சங்க சக்கரங்கள் ஏந்தி நான்கு திருக்கரங்களோடு சேவை சாதிக்கிறார். பரசுராமருக்கு இங்கே ஆலயம் இருப்பது மிக்க விசேஷம். அதனருகில் மத்ஸ்யாவதார மூர்த்தி சந்நிதியுமுள்ளது.

அனந்த பத்மநாப ஸ்வாமியின் திருமுடி ஸ்தானமாகிய 'பாதபூர்'— இங்கிருந்து எட்டு மைல் தூரத்தில் உள்ளது. யாத்திரிகர்கள் நாடோறும் கூட்டம் கூட்டமாக விஜயம் செய்கிறார்கள். இதனால், பஸ்களில் இடம் கிடைப்பது சிறிது கடினம்.

மலைநாட்டுக் கோயில்களின் அர்ச்சகர்கள் நம்பூதிரிகள்; இவர்களைப் போத்திமார்கள் என்றும் அழைப்பதுண்டு; மிகுந்த ஆசாரமாக இருந்து பூஜைகள் செய்கின்றனர்; பூஜை முறைக் காலங்களில் வீட்டிற்குப் போகக் கூடாது; மும்முறை ஸ்நானம் செய்ய வேண்டுமென்ற நியதிகள் இவர்களிடம் காணப்படுகின்றன; துளசியும் தீர்த்தமும் சந்தனமும் கோயிலில் வழங்குகிறார்கள்.

அன்று அனந்த பத்மநாபனுக்கு ஈழவன் அளித்த கஞ்சி உணவே இன்றும் அளிக்கப்படுகிறது. தேங்காய் கப்பரையில் ஏழை ஈழவன் கஞ்சியளித்த ஞாபகார்த்தமாகத் தங்கக் கப்பறையில் இன்று கஞ்சி நைவேத்தியம் செய்து வருகிறார்கள்.

கோயிலுக்குச் சிறிது தொலைவில் 'மித்ரானந்தபுரம்' இருக்கிறது. இதனால் பத்மநாப ஸ்வாமி ஆலயம் 'திரு அனந்தபுரம்' என மாறிற்று என்பர். நூற்றியெட்டுத் திவ்ய தேசங்களில் திருவனந்தபுரமும் ஒன்றாகும். இதனை, 'மடைத்தலை வாளை பாயும் வயலணியனந்தபுரம்' என்றும், 'பெரிய நீர் வேலை சூழ்ந்து வாசமே கமழும், சோலை வயலணி அனந்தபுரம்' என்றும் நம்மாழ்வார் மங்களா சாசனம் செய்துள்ளார். கி. பி. எட்டாம் நூற்றாண்டுக்கு முன்னரே சங்க காலத்தில் இந்த ஆலயம் புகழ் பெற்றிருந்தது எனத் தலபுராணம் கூறும்!

கோயிலிலுள்ள கல்வெட்டுகளும் முறை ஜபத்தின் வரலாறும்:

அனந்த பத்மநாப ஸ்வாமியின் ஆலயம் கி. பி. 1686ஆம் ஆண்டு தீப்பிடித்து, விக்ரகம் தவிர கோயி லின் மற்ற பாகங்கள் முழுவதும் சாம்பலாயின. அதன் காரணமாக பத்மநாபேந்திர யோகி என்ற மகா னின் ஆக்ஞைப்படி, பாலச்சந்திரன் என்ற அந்தணச் சிற்பியின் உதவி மூலம் விமானத்திலிருந்து தீபச்சாலை வரை ஆலயத்தைப் பால மார்த் தாண்டவர்மன் கட்டினான்.

மூலக்கிரகம் திருவெண்ணாழி, ஒற் றைக்கல் மண்டபம், அர்த்த மண் டபம் முதலியன அப்போதே கட்டப் பட்டன. அதன் பிறகே பத்மநாபர், பாம்பணை, ஸ்ரீதேவி பூதேவி ஆகிய சிலைகள் திருப்பணி செய்யப்பட்டுக் கொல்லம் ஆண்டு 908ல் மகா கும் பாபிஷேகம் செய்யப்பட்டதாகக் கல் வெட்டொன்று கூறுகிறது.

நேபாளத்துக்கு அருகே 'கோண்டக் நதி' (River Ghondaug) தீரத்தி லுள்ள சாளக்கிராமக் கற்களைக் கொண்டு அனந்த பத்மநாபர் சிலை திருப்பணி செய்யப்பட்டதாக மற் றொரு கல்வெட்டுக் கூறுகிறது. கோயி லில் கிடைக்கும் மிகப் பழமையான கல்வெட்டு கி. பி. 1165ஆம் வருஷத் தியது என்பர் ஆராய்ச்சி வல்லுனர்.

ஆறு வருஷங்களுக்கொரு முறை ஆலயத்தில் 'முறை ஜபமும்', 'லக்ஷ தீப உற்சவமும்' நடைபெறும். கார ணம்—திருவாங்கூர் மன்னர் பெரு மானொருவர் தாம் திக்விஜயம் செய்த போது இழைத்த கொடுமைகளுக்குப் பிராயச் சித்தமாக இந்த முறை ஜபத்தை ஆரம்பித்து வைத்தார்.

இம் முறைஜபம் ஐம்பத்தியாறு நாட்கள் தொடர்ந்து நடக்கும்; ஐம் பத்தியாறுவது நாள் மாலை ஒரே சமயத்தில் லக்ஷ தீபங்கள் ஆலயத் தைச் சுற்றி ஏற்றப்படும்; அதோடு அவ்விழா முடிவடையும். ஆலயத்தில் 'நவராத்திரி விழா' புரட்டாசி மாதத் தில் பத்து நாளைக்கு வெகு விமரிசை யாக நடைபெறும்.

விஜயதசமியன்று மஹாராஜா தங்க ரதத்தில் பவனி வருவார்; மற் றொரு விழா ஆராட்டு விழா எனப் படும். இவ்விழாவின் கடைசி நாள் அன்று பத்மநாப ஸ்வாமி, நரஸிம்மர், கிருஷ்ணர் ஆகிய உற்சவமூர்த்திகள் தனித்தனி வாகனத்தில் புறப்பாடு செய்து, கோயிலை வலம் வந்து 'சங்கு முகம்' கடற்கரைக்கு நீராடச் செல் வர்.

மன்னரும் மற்றப் பரிவாரங்களு டன் கையில் கத்தி ஏந்தி மூன்று மைல் தூரம் சுவாமியுடன் கடற் கரைக்கு நடந்தே செல்லுவர். யானை கள், குதிரைகள் முதலியன ஊர்வல மாகச் செல்லும். அஸ்தமனம் ஆன பிறகு விக்கிரகங்களுக்குக் கடல் நீராட்டு நடக்கும். மன்னவரும் மற்ற வரும் அப்போது கடலில் ஸ்நானம் செய்வர். பின் ஸ்வாமி கோயிலுக்குச் செல்லுவதோடு விழா பூர்த்தியடை யும். பின்பு கொடி இறக்கப்படும்.

ஸ்ரீ பத்மநாப தாஸர்கள் என்ற பட்டப் பெயரோடு திருவாங்கூர் மன்னர்கள் இறைவன் தரப்பில் நாட்டை ஆண்டு வந்தார்கள் என்று சொன்னோம். அதன் நினைவாக ராஜ் யத்தின் முத்திரை விஷ்ணுவின் ஆயுதமாகிய சங்கமாகும். நாண யங்கள் இதனால் 'சக்கரம்' என்று வழங்கி வந்தன.

முடிவுரை:

திருவனந்தபுரம தென்னிந்தியாவி லுள்ள எல்லாத் தனிப்பட்ட நகரங் களையும் விட பெரிய நகரம். தலை நகராக இருப்பதால்தான் தற்போ திருக்கும் அளவுக்கு அது வளர்ச்சி யடைய முடிந்தது. வானளாவிய அழகிய கட்டிடங்களையுடைய கம்பீர மான கடை வீதிகளில் கண்ணைப் பகட் டும் விதவிதமான மின்சார விளக்கு கள் ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்க இப் பட்டணத்தில் அழகை இரவில்தான் நன்குணரலாம். இங்கு ஒரு பிரதான நகரத்துக்குத் தேவையான சகல வச திகளும் இருக்கின்றன. ஊரைச் சுற்றி நானாபுரமும் பல்வேறு கைத் தொழிற்சாலைகள் புதிது புதிதாக நிர்மாணிக்கப்பட்டு நடந்து வருகின் றன.

திருவனந்தபுரத்தில் எல்லாவகை யிலும் நிச்சயமான பல அனுகூலங் கள் உள்ளன. எல்லாப் பருவ நிலை களிலும் சுத்த ஜலம் கிடைக்கும் வசதி இந்நகருக்கு வாய்த்திருக்கிறது. பிற இடங்களில் இதுபோன்று இல்லை என்பது குறிப்பு. கிள்ளி, கார்மனை என்ற இரண்டு நதிகள் இவ்வூரின் ஊடே பாய்கின்றன.

உபயோகத்தில் இல்லாத பல பெரிய அரண்மனைகள், உன்னதக் கட்டிடங்கள் இங்குள்ளன. அனந்த பத்ம ஸ்வாமி கோயிலைச் சுற்றி யுள்ள கோட்டையையும் அதற்குள் அமைந்துள்ள கட்டிடங்களையும், சர்க்கார் அலுவலகங்களையும் அவசி யம் பார்க்க வேண்டியவை.

கலைகளிலும் கேரளம் முன்னணி யில் நிற்கிறது. கதக்களி, ஓட்டம் துள்ளல், சாக்கியர் கூத்து, கும்மி இவை எல்லாம் சிறந்த ஆட்டங்கள். ஓணம் விழாவின்போது படகுப் பந் தயம் காண வேண்டிய காட்சிகளில் ஒன்று; காஷ்மீர், உதக மண்ட லம், மைசூர் என்று போகிறவர்கள் ஒரு வாரம் அல்லது பத்து நாட் கள் கேரளம் போய் வரலாம். ஆனால், மழை காலமாகப் பார்த்துப் போய் விடாதீர்கள், வெளியே தலை நீட்ட முடியாது!

★

# துர்க்கா நவராத்திரி



மகிஷாஸுர மர்த்தினி - சிவன்கோயில்
— தாடி பத்ரி (ஆ. பி.)

நவராத்திரிகள் ஐந்து. அவ்வைந்து நவராத்திரிகளிலும் சிறப்பாகவும் வழக்கமாகவும் கொண்டாடப் பெறுவது ஸ்ரீசாரதா நவராத்திரி ஆகும். இதைத் துர்க்கா நவராத்திரி என்றும், மஹா நவராத்திரி என்றும் அழைப்பர். நவராத்திரி விரதம் அம்பிகையின் அருளைப் பூரணமாகப் பெற்றுத் தருவது.

தருமத்தின் வடிவான தருமரும், திருமாலின் அவதாரமான ஸ்ரீராமரும் தங்கள் வெற்றிக்கு இந்த நவராத்திரியை அனுஷ்டித்தனர். தனது மாங்கல்யம் குறையாமல் இருக்க சாவித்திரி இதைக் கடைப்பிடித்தாள். புராண புருஷர்களும் இதிகாச மணிகளும் மேன்மைப் பெற விளக்கேற்றி வைத்தது நவராத்திரி விரதமே!

உபாசகர்களும் எளிய மக்களும் நவராத்திரி விரதத்தைக் கடைப்பிடிக்கிறார்கள். உபாசகர்கள் தங்கள் தங்கள் குருமுகமாகக் கேட்டபடி பொது வழியையும் புனித நெறியையுமே காட்டுவோம்.

அம்பிகையை வழிபட மாதங்களில் தையும், ஆடியும் சிறந்தது. வாரங்களில் செவ்வாய், வெள்ளி உகந்தன. திதிகளிலோ அஷ்டமியும், சதுர்தசியும், பௌர்ணமியும் மிக மேன்மையானவைகள். நட்சத்திரத்தில் உத்தர நட்சத்திரம் அம்பிகைக்கு ஏற்றது. ஒவ்வொரு நாளும் வரும் இரவுக் காலம் அம்பிகை பூஜைக்கே உரியது. இரவில் செய்யப்படும் எல்லாவிதமான பூஜைகளும் அன்னையைத்தான் சாரும்.

பண்டொருநாள் ஏகாதச ருத்திரர்கள் அன்னையை வழிபட்டு ஓரிரவாவது தங்களின் இரவு பூஜையை சிவபெருமானுக்குச் சேரச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். அம்பிகையும் அவர்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய மஹா சிவராத்திரியை வழங்கினாள்.

முன் நாட்களில் நவராத்திரி பூஜை துர்க்கா பூஜை என்றே வழங்கப் பட்டு வந்தது. இந்த பூஜையில் ஸ்ரீ வித்யா மந்திரங்களும், உபதேச மந்திரங்களும் ஜெபம் செய்யப் பெற்று, உரு ஏற்றப் பெற்று வலுவாக்கிக் கொண்டார்கள். நவராத்திரி பூஜை சுரதன் என்ற மாமன்னன் காலத்திலேயே உருவம் வைத்து வழிபடும் தன்மையை எய்தியது. மேதஸ் என்ற மகரிஷி சுரதனுடைய துன்ப நிலை கண்டு வருந்தி அவனை இவ்வண்ணம் பூஜை செய்யும்படி ஆணையிட்டார். சுரத மன்னன் வழிபட்டது வசந்த காலத்திலே. அதனால்தான் சித்தி பெற விரும்புகிறவர்கள் வசந்த நவராத்திரியைக் கைப் பிடிக்கிறார்கள். இந்த வசந்த நவராத்திரியை இதனால்தான் 'ஜெப நவராத்திரி' என்றும் சித்தர்கள் வழியில் சொல்லுகின்றோம்.

இராவணனுடைய வலிமை, அவன் தவத்தினால் பெற்ற வரங்கள் இவைகளை உணர்ந்த ஸ்ரீராமன் அவனை வெல்லும் வழியைச் சிந்தித்து இருந்தான். லோபா முத்திரையின் கணவரும் சித்தர்களில் மூத்தவரும், உருவத்தால் குறுகி, மந்திரத்திறனாலும், அறிவுத் தெளிவாலும் உயர்ந்த அகத்தியர் இராமரின் சிந்தனைக்கு முடிவு கட்டினார். ஸ்ரீராமனுக்கு இராவணனை சம்ஹாரம் செய்யும் பூரண வலிமையைக் கொடுக்கும் ஸ்ரீ பஞ்சதசாக்ஷரி என்ற ஸ்ரீ வித்யா மகா மந்திரத்தை வலது காதிலே உபதேசித்தார். அதிலிருந்து ஸ்ரீராமன் தேவி பக்தனாக மாறிப் புரட்டாசி மாதம் சுக்ல பக்ஷ பிரதமை முதல் நவமி முடிய ஒளியான ஒன்பது நாட்களிலும் ஸ்ரீ தேவியைப் பூஜித்தான். ஸ்ரீ ராமன் அன்னையை இந்த ஒன்பது நாளும் இரவில் நியம நிஷ்டையுடன் பூஜை செய்தது முதல் இது சிறந்த நவராத்திரியாக ஒளிர் விட்டது. இராமனும் அன்னையை வழிபட்டு தசக்ரீவனை சம்ஹாரம் செய்தான். கண்ண பிரானும்கூட பிருந்தாவனத்தில் இவ்விதமே நவராத்திரி பூஜை செய்து அன்னையின் அருளைப் பெற்றார்.

நவராத்திரியில் ஒன்பது நாளும் அன்னை ஒன்பது வடிவங்களில் அருள் பாலிக்கின்றாள். சர்க்கரை ஒன்றாக இருந்தாலும் பாகின் பதத்திற்கும்

**ஸ்ரீ துர்க்கைச்சித்தர்**



வேந்தன்பட்டி ஸ்ரீ மீனுட்சி சொக்கலிங்கேஸ்வரர் திருக்கோயில்
நவராத்திரி அலங்காரம் [(சக்தி) அம்மன் சிவபூஜை செய்யும் அலங்காரம்]
திரு. வி. முத்துராமன் - கோவை.

சேரும் பொருளுக்கும் ஒப்ப வெவ்வேறு பொருள்க மாறுவது போல மூலப் பிரகிருதியாக விளங்கும் அன்னை ஒன்ருகவும் பலவாகவும் காட்சி தருகின்ருள். வழக்கத்தில் முதல் மூன்று நாட்களும் தமோ குண நிறங்கொண்ட துர்க்கா தேவியையும், சதுர்த்தி முதல் மூன்று நாட்களும் ரஜோ குண நிறங் கொண்ட திருமகள் வடிவையும், சப்தமி முதல் மூன்று நாட்கள் சத்வ குண மயமான வெண்ணிற சரஸ்வதி வடிவையும் பூஜை செய்கிருேம்.

பத்தாவது நாளில் விஜயதசமி யென்று கொண்டாடுகிருேம். இந்த விஜயதசமி எப்படி வந்தது?

பஞ்ச பாண்டவர்கள் துரியோதனுதியரிடம் தோற்றதால் நாட்டை இழந்து வாழும் நிலை ஏற்பட்டது. அவர்கள் காட்டில் மறைந்து வாழ்ந்த காலத்தில் தங்கள் ஆயுதங்களை ஓர் பெரிய வன்னி மரத்தின் பொந்தினுள் ஒளித்து வைத்திருந்தார்கள். அவர்களின் அக்ஞாதவாச பன்னிரெண்டு ஆண்டுக் காலத்தில் வன்னி மரம்தான் அவர்கள் ஆயுதங்களின் பாதுகாப்புப் பெட்டகமாயிற்று.

அவர்கள் மறைந்து இருந்து வாழும் போது மற்றவர்களால் தெரிந்து கொள்ளாமல் இருப்பதற்கும் அக்காலத்தில் தங்கள் துன்பங்கள் தங்களைத் தாக்காமலும் இருக்க என்ன வழி என்று தேடினர்கள். வனத்தில் தவம் செய்யும் பெரும் முனிவர்களை அண்டி வணங்கினர்கள். முனிவர்கள் மன்னர்களுக்கு ஸ்ரீ துர்க்கா தேவியின் புகலிடத்தைக் காட்டினர்கள். துன்பங்களில் இருந்து காப்பவளும், துன்பங்களை விடுவிப்பவளும் துர்க்கையே. துர்க்கா தேவியை அண்டியவர்களுக்குத் துன்பத்தின் சாயல் கூடத் தொடராது. தாரித்திரியம், துக்கம், பயம் இவைகளைப் போக்கி உலகுக்கு உபகாரம் செய்பவளே துர்க்கை. இதை அறிந்த பாண்டவர்கள் தருமரை முதலாகக் கொண்டு தேவியை வழிபட்டார்கள். மகரிஷிகளால் உபதேசிக்கப்பட்ட 'ஸ்ரீ துர்க்கா நக்ஷத்ர மாலிகா துதி' என்ற இருபத்தேழு ஸ்லோகங்களைக் கொண்ட துதியால் நாள்தோறும் துதித்தார்கள். இதனுல் தேவியின் திருவருள் கிட்டியது. அசுவனி முதல் ரேவதி முடிய உள்ள இருபத்தேழு நக்ஷத்திர அதிதேவதைகளும், நக்ஷத்திரங்களும் இவர்களுக்கு ஆசி கூறி நன்மைகளை வழங்க எத்தனமாய் நின்றன. தங்கள் அக்ஞாதவாசம் முடிந்ததும் வன்னி மரப் பொந்தில் இருந்து தங்கள் ஆயுதங்களை எடுத்து அம்மரத்தடியில் வைத்து பூசித்தார்கள். வன துர்க்கையாகவும், எல்லாச் சங்கடங்களையும் சங்கரிப்பவளாயும், தீமைகளை அடக்கி ஒடுக்கி நன்மைக்கு வெற்றி தருபவளாயும் விளங்கும் தேவியை ஒன்பது நாட்கள் வழிபட்டார்கள். தசமியில் ஆயுதங்களை எடுத்துக் கொண்டார்கள். விஜயம் தரும் தசமி இது என்பதாலும், விஜயனுல் மிகவும் பக்தியுடன் பூஜிக்கப்பெற்றது என்பதாலும் இது விஜய தசமி என்ற பெயரைப் பெற்றது.

இதை விஜய நவராத்திரி என்றும், வன்னி நவராத்திரி என்றும், வன துர்க்கா நவராத்திரி என்றும் அழைப்பது வழக்கம்.

இவைகளைப் பற்றி எல்லாம் விரிவாகவும் விளக்கமாகவும் தெளிவாகவும் தேன் ஒழுகவும் தேவி மகாத்மியமும், மார்க்கண்டேய புராணமும், தேவி பாகவதமும், அருணாசல மான்மியமும், லலிதம் முதலிய நூல்களும் பேசுகின்றன.

நவராத்திரியில் அமாவாசையன்று பூஜையை அங்குரார்ப்பணம் செய்ய வேண்டும் அல்லது பிரதமை தினத்தன்று காலையில் விக்னேஸ்வர பூஜையைத் துவங்கிக் கொள்வதும் உண்டு. பிரதமை முதல் ஒன்பது நாட்களும் காலையும் இரவும் தேவியைப் பூஜிக்க வேண்டும். ஹோமங்களைக் காலையிலும், அர்ச்சனை வழிபாடுகளை இரவிலும் செய்வது வழிவழி வழக்கம்.

ஒன்பது நாளிலும் வபனம் செய்தல் (முடி நீக்குதல்) ஆகாது. மருந்துண்ணல் கூடாது. பொய் நீக்கிய வாழ்வும் அன்னை புகழ் பேசும் நாவும் கொண்டு விளங்க வேண்டும். நவராத்திரியில் ஒன்பது நாளும் முறையே சைலபுத்திரி, பிரும்மசாரிணி, சந்திர காண்டா, கூஷ்மாண்டா, ஸ்கந்தமாதா, காத்யாயனி, காலராத்ரி, மகா கௌரி, சித்திதா என்ற நவதுர்க்காவாக நவ நாட்களிலும் ஒளிர் விடுகிறாள். இதனால்தான் கன்யா பூஜையில் அந்தந்த நாளுக்குரிய தேவியாக பெண் குழந்தைகளை வரித்து பூஜை செய்யப் பெறுகின்றது.

நவராத்திரி ஒன்பது நாட்களும் பகலில் சிறு உணவோ அல்லது ஏற்ற உணவோ கொண்டு இரவில் பட்டினி இருத்தல் வேண்டும். ஒரு சிலர் பகலெல்லாம் நோன்பு இருந்து, இரவில் அன்னையின் வழிபாடு நிறைந்த பின்னர் சிற்றுணவு கொள்வது உண்டு இதுவும் ஏற்றதே. இந்த ஒன்பது நாட்களிலும் பானகமும், தேனும் நிவேதிப்பது மிகவும் அவசியம். இக்காலத்தில் வீட்டிற்கு வரும் எல்லா சுவாசினிகளையும் (ஜன்ம விரோதியாக இருந்தாலும்) அன்னையாகவே பாவித்து அவர்களுக்குரிய மரியாதை செய்தல் வேண்டும். முதல் மூன்று நாள் துர்க்கா அஷ்டோத்ரம், சகஸ்ர நாமமும், அதற்கு அடுத்த மூன்று நாள் லட்சுமி அஷ்டோத்ரம், சகஸ்ர நாமமும், அதற்கு அடுத்த மூன்று நாளில் சரஸ்வதி அஷ்டோத்ரம் சகஸ்ரநாமமும் ஜெபிப்பதும் அருச்சனை செய்வதும் சிறப்பு.

உபாசகர்கள் எவ்வளவுக்கவ்வளவு ஜெபம் செய்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு வலுப் பெறுகிறார்கள். தேவி மகாத்மிய பாராயணத்தை

---

ஏழுபகுதிகளாகப்பிரித்தோ முழுவது மாகவே இந்த நாட்களில் படிப்பவர் தங்கள் குலத்தின் பாவமூட்டையை எரிக்கிறார்கள். எவன் ஒருவன் இந்தத் தேவி மகாத்மியம் படிக்கப்படும் இடத்தில் அமர்ந்து கேட்கிறானோ அவன் தனது பஞ்ச இந்திரியங் களினால் செய்த பாவங்களிலிருந்து விடுபடுகிறான். பணக்கவலை யும், மனக்கவலையும், குலக் கவலையும் தீர தேவி மகாத்மியம் ஒன்றுதான் சிறந்த வழி. வாழ்க்கை யின் பாதை தெரியாமல் தத்தளிக் கும் போது இந்த தேவி மகாத் மியத்தை நவமியில் ஒரு தடவை படித்தால் அல்லது படிக்கச் சொல்லிக் கேட்டால் அல்லது கேட்டவனின் வாய்மூலம சொல்லக் கேட்டாலும் கூட அவனுக்கு நல்ல வழி கிடைக் கிறது.

நவராத்திரியில் முதல் மூன்று நாட் களில் எலுமிச்சம்பழச் சாதம்,எள்ளுச் சாதம்,தயிர்ச் சாதம் இவைகள் சிறப் புடையன. அடுத்த மூன்றில் சர்க் கரை அன்னம், பால் சாதம், கற் கண்டு அன்னம் கனிவுடையன. அடுத்த மூன்றில் வெண் பொங்கல், தேங்காய் சாதம், பால் சாதம் பலன் தருவன. முதல் மூன்று நாட் களில் செம்மைநிற, மஞ்சள்நிற, நீல வண்ண மலர்கள் சிறப்புடையன. அடுத்த மூன்று நாளில் செண்பகப் பூ, வில்வதளம், செந்தாமரை மலர், ரோஜா, கதம்பம் இவைகள் நன்மை தருவன. அடுத்த மூன்று நாட்களில் மல்லிகை, முல்லை, நில சம்பங்கி, நந்தியாவர்த்தம், வெண் தாமரை, துளசி இவைகள் பலன் தருவன.

இரவில் கன்னிகைகள் துலக்கிய திரு விளக்கு ஏற்றி, ஒன்பது நாளும் ஒரே இடததில விளக்கை அமர்த்தி அகண்ட தீபமாக அதை ஒளிரச் செய்ய வேண்டும். அந்த விளக்கை ஸ்ரீ துர்க்கா தேவியாக மனத்தில் பாவித்துகாலையிலும்,இரவிலும்'சர்வ மங்கள மாங்கல்யே' என்ற சுலோ கத்தை 108 தடவை படித்து நமஸ் காரம் செய்தால் திருமணம் கை கூடும். சுமங்கலிகள் செய்தால் குடும் பத்தில் ஒற்றுமை வளரும்; தரித் திரம் தீரும். பிரும்மசாரிகள் செய் தால் நினைவாற்றலும் நூல் புலமை யும் கை வரும். கிரகஸ்தர்கள் செய் தால் தங்கள் குடும்ப துன்பங்கள் ஒழிந்து குல தெய்வ அருளைப் பெற்று, பசியும் பஞ்சமும் அண்டாத வாழ்வு பெறுவார்கள். இது சித்தர்கள் முறை. நவராத்திரியில் ஒன்பது நாட்களும் குறிப்பிட்ட நேரம் வரை யில் மௌனம் கடைப்பிடித்தல் வேண்டும். இவ்விதம் பழகி மௌன நேரத்தை வாழ்க்கையில் மிகுதிப் படுத்த வேண்டும். வாசகர்கள் நவ ராத்திரியில் அன்றன்று செய்யும் ஜெபத்தில் பத்தில் ஒரு பங்கு தர்ப் பணம் செய்தல் மிகமிக அவசிய மாகும். தங்கள் குரு சொல்ல மறந் திருந்தாலும் இதை நினைவில் கொள்ள வேண்டும். இயன்றவர்கள் மட்டும்ஹோமம் செய்தால்போதும். அன்னையின் அருள் கொண்ட நவ ராத்திரியைப் பற்றி சொல்வதற்கு வார்த்தைகள் போதாது. ✿

---

# வங்காளமும் நவராத்திரியும்

" யாதேவி ஸர்வ பூதேஷு மாத்ரு
ரூபேண ஸம்ஸ்திதா
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை
நமஸ்தஸ்யை நமோ நம: "

நவராத்திரிக்கு முந்திய ஷஷ்டி யன்றே தேவியை வரவேற்க வங்காளிகள் தயாராகி விடுகிறார்கள். எல்லா இடங்களும் சுத்தமாக்கப் பட்டுக் குப்பைகள் அள்ளப்பட்டு வீடுகள் துப்புரவு செய்யப்படுகின்றன. புதுமை மெருகு ஊட்டப்பட்டு அலங்காரப்பந்தல்கள் தேவி பூஜைக்காக அமைக்கப்படுகின்றன. ஷஷ்டியன்று அலங்காரப் பந்தலுக்குள் தேவியை ஆவாஹனம் செய்து ஆகமனிகான் என்ற வரவேற்புப் பாடலை வங்காளப் பெண்டிர் இசைக்கின்றனர். இதன் பொருள் பின் வருமாறு :

"தாயே! நீ ஹிமாலயத்திலிருந்து பூமியில் எங்கள் வங்காளத்திற்கு வருகின்றாய். ஆனால் இங்கு நீ இருக்கப் போவது சில நாட்களே. உன் நாயகரான பரமேச்வரன் உன்னை அதிக நாள் பிரிந்திருக்கமாட்டார். எங்கள் வீட்டுப் பெண்ணான நீ உன் குழந்தைகளான கணநாயகன், ஷண்முகன் இருவருடன் வந்துள்ளாய். உன்னைப் பிரியும் நாள் சில தினங்களில் வந்து விடப் போகிறது. உன்னைப் பிரியும்போது எல்லையில்லா மனத் துயரும் வேதனையும் பெருகும். மீண்டும் உன்னைக் காண ஒரு வருடமல்லவா காத்திருக்க வேண்டும்" தேவியை வரவேற்கும் வங்காள கிராமிய நாடோடிப் பாடல் இது வாகும்.

தேவியைப் பற்றி வங்காளிகள் கூறும் புராணக் கதை பின் வருமாறு: ரம்பன் என்னும் அரக்கன் கடும் தவம் செய்து மூவுலகையும் வெல்லக் கூடிய ஒரு மகனைப் பெற்றான். இவனே மகிஷாசுரன். மகிஷன் பிரம்மாவைக் குறித்துத் தவம் செய்து எந்த மனிதனாலும் அன்றி தேவராலும் வெல்லப்படாத வரத்தை பெற்று மூவுலகையும் கைப்பற்றித் துன்புறுத்தத் தொடங்கினான். பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், இந்திரன் முதலானோர் ஒன்று கூடி தத்தம் மனைவி மக்களுடன் தவம் செய்தனர். அந்த சக்திகளின் கூட்டு ஸ்வரூபமாக துர்க்காதேவி தோன்றினாள். இவளே மகிஷாசுரனை வதைத்து உலகிற்கு நன்மை செய்தாள்.

துர்க் என்றால் கோட்டை. கோட்டையைப் போன்ற பலமும் சக்தியும் அழகும் கொண்டவளாகத் துலங்குவதால் துர்க்கா என்று அழைக்கப்பட்டதாகக் கூறுகின்றனர். தேவியின் பூஜைக்குரிய காலம் வஸந்த ருதுவே ஆயினும் ஆரியர்கள் வருகைக்குப் பின் துர்க்கை சரத்ருதுவில் பூஜிக்கப்பட்டாள். இதற்குரிய வரலாறாக ராமாயணத்தின் சம்பவம் ஒன்று வங்காளத்தில் கூறப்படுகிறது.

ராம ராவண யுத்தத்தில் ராமனால் ராவணனைக் கொல்ல முடியவில்லை. காரணம் ராவணன் காளி உபாசகன். எனவே தேவர்கள் ராமனையும், துர்க்கையை ஆராதித்து எழுந்தருளச் செய்து அவள் அருளைப் பெறுமாறு யோசனை கூறினார்கள். ராமனுக்கோ தயக்கம். சரத் காலத்தில் அம்பாளை எழுப்புவது வழக்கமல்லவே. இது தேவி பூஜைக்குரிய சமயமல்லவே என்று ராமன் வாதிட்டான். காலமில்லாத காலத்தில் அம்பாளை எழுப்புவது அகால போதன் என்று கூறிய தேவர்கள் அதனால் அம்பாள் மேலும் உக்கிரமடைந்து ராவணனைக் கொல்ல உதவி புரிவாள் என்று தேவர்கள் வற்புறுத்தவே ராமன் தயக்கத்துடன் சம்மதித்தார். புரட்டாசி மாதத்தில் மஹாளய அமாவாசையன்று இந்தத் தீர்மானம் நிறைவேறியதும் ஹனுமான் பூஜை திரவியங்களைக் கொண்டு வந்து குவிக்கிறார். ஷஷ்டியன்று பூஜை தொடங்கி சப்தமி, அஷ்டமியன்று சந்தியா கால பூஜையிலும் தேவி உற்பவம் ஆகவில்லை. நவமியன்று கிடைத்தற்கு அரிய நூற்றெட்டு அழகிய நீலத்தாமரை மலர்களை 'தேவி தாஹா' என்னும் மிகத் தொலைவில் உள்ள மலைச்சிகரத்தில் இருந்து ஹனுமான் கொண்டு வந்து சேர்க்கிறார். அவற்றை முறைப்படி பூஜித்தும் தேவி மனம் இரங்கவில்லை. செய்வதறியாது திகைத்த ராமன் தன் இரு அழகிய நீலோத்பலம் போன்ற கண்களையே பாணத்தால் பறித்து தேவிக்கு அர்ச்சிக்க முற்படுகிறார். ராமனை இத்தீவிரமான செயலில் இருந்து தடுக்க அம்பாள் பிரஸன்னமாகி, ராமனுக்குத் தன் பூரணமான சக்தியையும் அளிக்கிறார். அன்னையின் கருணையினால் தசமியன்று ராவணன் ராமனால் கொல்லப்பட்டுச் சீதை சிறை மீட்கப்படுகிறாள். துர்க்கை கைலாசம் திரும்புகிறாள். வங்காளிகள் நவராத்திரி பூஜை தொடர்பாகக் கூறும் கதை இது வாகும்.

திரு. பி. சுந்தரராமன் M.A., B.Ed.,
பழமார்னேரி.

வங்காளத்தில் ராமன் செய்ததைப் போலவே ஷஷ்டியன்று 'அகால் போதன்' என்ற பூஜையை மாலையில் செய்கின்றனர். ஸப்தமியும் இது தொடர்கிறது. அஷ்டமியன்று சந்தி பூஜை மிக விசேஷம். நவமியன்று பெரிய பூஜை நடக்கிறது. தசமியின் பூஜையின்போது ராமனின் வெற்றி தேவியின் வெற்றியாகக் கோலாகலத்துடன் கொண்டாடப்படுகிறது. விஜயதசமி பூஜை முடிந்ததும் மிகப் பெரும் திருவிழாவாக துர்க்கையின் சிலை கங்கையில் போடப்பட்டு விஸர்கனம் செய்யப்படுகிறது. அதாவது ஹிமாலயத்திற்கு மீண்டும் தேவி அனுப்பப்படுகிருள் என்பது ஐதிகம்.

துர்க்கையுடன் லக்ஷ்மி, ஸரஸ்வதி, விநாயகர், கார்த்திகேயன் சிலைகளும் விழாவின்போது பூஜிக்கப்படுகின்றனர். பெரிய மரத்தட்டில் வெற்றிலை, பாக்கு, பழம், மஞ்சள், குங்குமம், நெல், பூணூல், சிவப்பு நூல், கண்ணாடி, பருப்பு வகைகள் வைத்து சுமங்கலிகள் படைக்கின்றனர். மணியடித்து சங்கம் ஊதி பூஜை செய்து கற்பூரஹாரத்தி செய்கின்றனர். பெரிய மண் பானையில் ஜலம் வைத்து அதில் அம்பாளின் முகத்தை மரம் அல்லது சுதையால் செய்ததை அணிவித்து முக தரிசனம் செய்கின்றனர்.

இனிப்பு வகைகளும், பழங்களும், சமைத்த உணவுகளுமே தற்போது படைக்கப்படுகின்றன. சிற்சில இடங்களில் எருமைக்கடா, ஆடுகள் பலி கொடுக்கும் வழக்கமும் உள்ளது. ஆனால் இது பெரும்பாலும் மறைந்து விட்டது என்றே கூற வேண்டும்.

தசமிக்கு மறுநாள் துர்க்கையின் சிலையை கங்கையில் போட்ட பிறகு அந்தப் பானையில் இருக்கும் ஜலம் சாந்தி ஜலம் என்றழைக்கப்பட்டு அனைவருக்கும் பிரஸாதமாகத் தரப்படுகிறது. இந்த தீர்த்தத்தை அருந்துவார்கள். தலையில் தெளித்துக் கொள்வார்கள். இது பாதங்களில் படக் கூடாது.

வங்காளத்தில் இந்த துர்க்கா பூஜையைப் பிரபலமாக்கியவன் வடக்கு வங்காளத்தை சேர்ந்த ராஜாஷாஹியை ஆண்ட கங்க்ஷன் என்னும் அரசன் ஆவான்.

ஸ்ரீதேவியின் பேரருளைப் பெற நவராத்திரியில் செய்ய வேண்டிய சில அனுஷ்டானங்கள் பின்வருமாறு :

## நவராத்திரி வழிபாட்டு முறைகளும் வகைகளும

| நாள் | கோலம் போடும் பொருள் | கோல வகை | ஸ்னானத்திற்கு உரிய பொருள் | தானம் | பொட்டு | ராகம் | வாத்யம் | மலர் | வினியோகம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | அரிசி மாவு | பொட்டு | பச்சிலை | சோழி பொன் | புனுகு | தோடி | மிருதங்கம் | வில்வம் | வெண் பொங்கல் |
| 2. | கோதுமை மாவு | கட்டம் | பூலாங் கிழங்கு | வெள்ளி குன்றிமணி | ஜவ்வாது | கல்யாணி | புல்லாங் குழல் | துளசி | புளியோதரை |
| 3. | முத்து | மலர் | குங்குமம் | முத்து தட்டை பவளம் | கஸ்தூரி | காம் போதி | வீணை | மரு | சர்க்கரைப் பொங்கல் |
| 4. | அட்சதை | படிக்கட்டு | பன்னீர் | பவளம், கிளிஞ்சல் | அரகஜா | பைரவி | கோட்டு வாத்தியம் | கதிர் பச்சை | கதம்பம் |
| 5. | கடலை | பறவை யினம் | சந்தனம் | வைடூர்யம் செப்பு | சந்தனம் | பந்து வராளி | ஜல்லரி | சந்தன இலை | தயிர் சாதம் |
| 6. | பருப்பு | தேவியின் நாமம் | வாசனைத் தைலம் | கோமேதகம் பொம்மை | குங்குமம் | நீலாம்பரி | பேரி வாத்யம் | தும்பை இலை | தேங்காய் சாதம் |
| 7. | மலர் | திட்டாணி | நலங்கு மஞ்சள் | புஷ்பராகம் அம்மானை | சாந்து | பிலஹரி | படகம் | பன்னீர் இலை | எலுமிச்சை சாதம் |
| 8. | காசு | பத்மம் | மருதோன்றி | மரகதம் பந்து. | ஸ்ரீசூர்ணம் | புன்னுக வராளீ | கும்மி | விபூதி பச்சை | பாயசம் |
| 9. | கற்பூரம் | ஆயுதம் | புஷ்பம் கலந்த பரிமள நீர் | வைரம் கழற்சிக்காய் | மை | வஸந்தா | கோலாட்டம் | மருக் கொழுந்து | அக்கார அடிசில் |

# ஏழுமலையில் ஏழின் பெருமை

திருமலை என்ற ஏழுமலையில், ஏழு மலையான் நித்யவாசம் செய்து வருகின்றான்.

ஏழுமலையில் வாசம் கொண்டுள்ள திருமலைநாதனை திருமலைவாசா, ஸ்ரீநிவாஸா, ஏழுமலையானே, பாலாஜி, கோவிந்தா, ஏழு கொண்டலு வாடா, கலியுக வரதா என்ற "ஏழு" திருப்பெயர்களோடு அன்போடு பக்தர்கள் வழிபட்டு வருகிறார்கள்.

ஏழுமலையானது சேஷ சம்பந்தத்தால் "சேஷாசலம்" என்றும், அஞ்சனை தவம் இருந்ததால் "அஞ்சனாத்திரி" என்றும், விருபாசுரனை வதம் செய்ததால் "விருஷபாத்திரி" என்றும், கருடனால் கொண்டு வரப்பட்டதால் "கருடாத்திரி" என்றும், வேதங்கள் வந்து நின்றதால், "வேதாத்திரி" என்றும், ஆனந்தத்தைத் தருவதால், "ஆநந்தாத்திரி" என்றும், வேங்கடமலையாக இருப்பதால் "வேங்கடாத்ரி" என்றும் ஏழு வித அங்கங்களாக நிறைந்து காணப்படுகிறது.

ஏழுமலையானின் திருமேனியை, பழங்காலத்தில் மகரம், பவழக் கொம்பு, உதரபந்தம், திருவணப் பட்டிகை, வாகு வளையம், கரறை, பாதசாயரம் போன்ற ஏழு விதமான திருவாபரணங்களால் அலங்கரித்தார்கள்.

ராஜராஜன் காலத்தில் ஏழுமலையானின் வருமானத்திற்காக நஞ்சை வரி, புஞ்சைவரி, கடமை சூயம், பொன்வரி, வெட்டிச் சருக்கை, காணிக்கை, தானம் என்ற படியாக ஏற்படுத்திச் செல்வங்களைப் பெருக்கினார்கள். (ஏழு வகை வருமானம்)

செல்வம் பொங்கியவுடன் ஆவணி பிரம்ம உத்ஸவம், புரட்டாசி பிரம்ம உத்ஸவம், ஐப்பசி பிரம்ம உத்ஸவம், கார்த்திகைப் பெருவிழா, தைமாத உத்ஸவம், மாசித்திருவிழா, பங்குனிப் பெருவிழா போன்ற ஏழுவிதமான திருவிழாக்களை நடத்தி வந்தார்கள்.

அக்காலத்து அரசபரம்பரைகளான காடவன் பெருந்தேவி,தேவராய மகாராயர், புக்கராய மகாராயர், கிருஷ்ணதேவராயர், ஹரிஹர மகாராயர், வீரசிங்க யாதவ ராயர், சுந்தரபாண்டியன் போன்ற ஏழுவரால் பரம்பரை பரம்பரையாக விழாக்கள் ஏழுமலையில் கொண்டாடப்பட்டு வந்தது.

ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் ஏழுமலையானுக்கு ரத்னகிரீடம், முத்துமாலை, கோமேதக மாலை, மரகதமாலை, வைரம் பதித்த அணிகலன், மாணிக்க அங்கி, அத்துடன் ஒரு பெரிய வெள்ளித்தட்டு ஆக ஏழு விதமான செல்வங்களை அளித்தார்.

சோழவம்சத்து அனந்தராஜா காலத்தில் ரஜததானம், சுவர்ண தானம், துலாதானம், மடகிதானம், கோதானம், கன்னிகாதானத்துடன் தனது சிரமதானத்தையும் சேர்த்து ஏழு விதமான தானங்களை ஏழுமலையான் சன்னதியில் அளித்தார் என்பது பழங்கால வரலாற்றில் காணப்படுகிறது.

கமல பீடத்தில் பாதம் ஊன்றி, நவரத்தினங்களை அணிந்துகொண்டு, சுவர்ண மகுடம் தரித்து, மகரகுண்டலங்களை ஏற்று, மகர கண்டியுடன், நாகாபரணமும் சேர்த்து, தங்கப் பூணலுடன் ஏழுவித அணிகலன்களுடன் நித்ய சேவை சாதிப்பவர்தான் ஏழுமலையான்.

கர்ப்ப கிரஹத்தில் போக சீனிவாரன், மலைகுனிய நின்றார் (உற்சவர்) உக்கிர ஸ்ரீநிவாசன், கிருஷ்ணன், சீதாராம லட்சுமணர், சுக்ரீவன், சக்கரத்தாழ்வார் என்றபடியாக ஏழுவரும் குடி கொண்டுள்ளார்கள்.

ஏழுமலையானின் திருமஞ்சனத்தின் போது நல்லெண்ணெய், கஸ்தூரி, ஏலம், கிராம்பு, வெண்ணை, சர்க்கரை மற்றும் பச்சைக்கற்பூரம் போன்ற ஏழுவிதப் பொருள்களை உபயோகிக்கிறார்கள்.

ஏழுமலையான் நித்யப்படி சேவைகளாக,

மதுராந்தகம் (பகவான் பல்
தேய்த்து முகம் கழுவிக்கொள்வது)

---

**திரு. M. S. பிச்சுமணி,**
**பூவிருந்தவல்லி.**

---

ஸ்நானாசனு (பகவான் நீராடுதல்)
அலங்காராஸனு (பகவான் புது வஸ்த்திரம் தரிப்பது)
ஏகோஜயாசனம் (பகவானுக்கு நைவேத்யம்)
யாத்ராசனம் (பரிதேவதைகளுக்கு வழிபாடு)
சாயானுசனம் (ஏகாந்த சேவை)

இத்துடன் இணைந்த தோமால சேவை போன்ற ஏழு விதமான வகைகளை ஏற்றுக்கொள்கிறார்.

ஏழுமலையானின் பிரசாதத்திற்கு நெய், பாதாம் பருப்பு, திராட்சை, முந்திரிப்பருப்பு, ஏலக்காய், சர்க்கரை மற்றும் உளுத்தம்பருப்புபோன்ற ஏழுவிதமான பொருள்கள் செலவாகின்றது. (தோராயமாக வருடம் ஒன்றுக்கு தேவஸ்தானத்திற்கு மூன்று கோடி ரூபாய் வரை செலவாகிறதாம்)

ஸ்ரீராமானுஜர் - ஏழுமலையானின் ஆனந்த விமானத்தைப் பழுது பார்த்தார். ஏழுமலையானின் கழுத்தில் அலமேலுமங்கை சமேத கழுத்து அணியை அணிவித்தார். வெள்ளிக்கிழமை தோறும் திருமஞ்சனம் செய்ய ஏற்பாடு செய்தார். ஊர்த்தவ புண்டரீக திருமண்காப்பை அணிவித்தார். வியாழக்கிழமை தோறும் பூலங்கி சேவையால் அலங்கரித்து நாச்சியார் திருமொழியைப் பாடச் செய்தார். இரண்டு நாகாபரணங்களை இரண்டு புஜங்களுக்கும் அணிவித்தார் (இந்த ஆபரணங்களை ஆகாச ராஜனுல் அளிக்கப்பட்டது என்று சொல்வார்கள்).

வராஹப் பெருமாளுக்குப் பூஜை செய்த பிறகுதான் "ஏழுமலை" யானுக்குப் பூஜை செய்ய வேண்டும் என்றும் ஏற்படுத்திஞர். இப்படியாக ஏழுவித கைங்கர்யங்களைச் செய்தார்.

ஏழுமலையானுக்குச் சேவை செய்கிறவர்களே ஏழுமலையில் வசிக்க வேண்டும்.

திருவராதனம் ஆனபிறகே ஏழுமலையில் இருப்பவர்கள் உண்ண வேண்டும்.

மரணத் தருவாயில் எவராவது இருந்தால் உடனே அவர்களை ஏழுமலையிலிருந்து கீழே இறக்கிக் கொண்டு வரப்பட வேண்டும்.

மிருகங்களை ஏழுமலையில் இம்சிக்கக் கூடாது.

பாத அணிகளை அணிந்து கொண்டு செல்லக்கூடாது.

நடையாகவே ஏழுமலைக்கு வர வேண்டும். கபிலதீர்த்தம் முதல் ஏழுமலை வரை இடையில் எங்கும் எந்தக் கோவிலையும் கட்டக்கூடாது என்பன போன்ற ஏழு கட்டளைகளைப் பிறப்பித்தவர் ஸ்ரீராமாநுஜர்.

காளி கோபுரம் வழியாகத்தான் ஏழுமலைக்குச் செல்லவேணும்.

பெண்கள் புஷ்பத்தை அணிந்து செல்லக் கூடாது.

பூலங்கி சேவையின் போது வில்வ தளம் சேர்க்கப்படுகிறது.

திருமஞ்சனம் வெள்ளிக்கிழமை மட்டும்தான். அத்துடன் மஞ்சளும் சேர்க்கப்படும்.

நாகாபரணம் சூடிக்கொண்டு இருப்பது இங்குதான்.

தாயார் சன்னதி என்று ஏழுமலையில் கிடையாது.

சிங்கத்தின் உருவங்கள் திருக்கோவிலில் செதுக்கப் பட்டிருக்கும். இப்படியாக 'ஏழு' செய்திகள் சிந்தனையாளர்களுக்குப் பெரும் விருந்தாகவே அமைந்துள்ளன.

ஆகாச கங்கை, பாண்டவ தீர்த்தம், பாப விநாச தீர்த்தம், சுவாமி புஷ்கரணி, கிருஷ்ண தீர்த்தம், குமார தாரகை மற்றும் தும்புரு தீர்த்தம் போன்ற ஏழு தீர்த்தங்கள் ஏழுமலையில் தமது பாபங்களைப் போக்கவே உருவானதாகும்.

ஏழின் மகத்துவம் நிறைந்த ஏழுமலைக்கு ஸ்ரீகிருஷ்ண தேவராயர் ஏழு தடவை விஜயம் செய்து ஏழுமலையானுக்குக் கைங்கர்யங்கள் பலவற்றை அளித்தார்.

10-2-1513ல் முதல் விஜயம். அப்போது வைரம் பதித்த ரத்னகிரீடம், தங்கச் சங்கிலி, காதணிகள் அத்துடன் இருபத்தி ஐந்து வெள்ளித் தாம்பாளங்களை அளித்தார்.

3-5-1513ல் இரண்டாவது விஜயம். அந்தச் சமயம் வைரக்கிரீடங்களை அளித்தார்.

மூன்றுவது விஜயத்தின் போது, பதக்கத்துடன் கூடிய தங்க கழுத்து அணிகளையும், தினமும் அமுது படைக்க இரண்டு கிராமங்களையும் தானமாகக் கொடுத்தார்.

நான்காவது விஜயம் தை மாதம் ஒன்றில் இருந்தபடியால் தை மாத உற்சவத்தை நடத்த ஏற்பாடு செய்தார்.

25-10-1515ல் அவரது ஐந்தாவது விஜயம் நடைபெற்றது. அப்போது ஐந்து கிராமங்களை தானம் கொடுத்து, விலை மதிக்க முடியாத நவரத்ன பிரபாவளி, மகுட தோரணம் போன்ற திருவாபரணங்களையும் சமர்ப்பித்தார்.

2-1-1517ல் ஆருவது விஜயம் நிகழ்ந்தது. அப்போது கலிங்கப்படையெடுப்பு இருந்தது. இத்தருணத்தில் ஏழுமலையானின் கிருபை கிடைத்ததை எண்ணி மகிழ்ந்த ராயர் முப்பது வராகன் தங்க நாணயங்களையும் கொடுத்து, வைர அட்டிகையையும் அளித்து, விமானத்திற்குப் பொன்னும் கொடுத்து மகிழ்ந்தார்.

17-2-1521ல் ஸ்ரீ கிருஷ்ண தேவராயரது ஏழாவது விஜயம் இறுதியாகவே அமைந்தது. அப்போது ஒன்பது வைரங்கள் பதித்த பட்டுப் பீதாம்பரத்தையும் முத்துக்கள் பதித்த,வைரம் பதித்த, தலையணி மற்றும் சாமரத்தையும் காணிக்கையாகவே அளித்தார்.

இப்படியாக ஏழின் மகத்துவம் நிறைந்த ஏழுமலை, எல்லோரது நினைவிலும் மனத்திலும் என்றும் அகலாமல் நிற்கிறது.

"ஸெவன் ஈஸ் ஹெவன்" என்ற ஆங்கிலேயப் பழமொழியின்படி இந்திர லோகமாக இக்கலியுகத்தில்-கலியுக வரதனின் திருத்தலம் ஏழுமலை என்றும், திருமலை என்றும், திருவேங்கடமலை என்றும் புகழ் பரப்பி வருகிறது.

ஏழுமலையின் பெருமையை ஏழு நாட்களும் தொடர்ந்து சொல்லிக் கொண்டே போகலாம். எல்லாம் ஏழுமலையானின் கருணையேதான்.

ஏழு பிறப்பிலும் ஏழுமலையான் துணையுண்டு.

*

# வால்மீகி திருவுள்ள விளக்கு

ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

இங்ஙனம் ஆரண்ய காண்டத்தி லுள்ள எட்டுக் காரணங்களைத் தொகுத்துக் கூறி, கிஷ்கிந்தா காண்டத்தைச் சேர்ந்த காரணங்களைத் தொகுத்துக் கூறுகிறார் 'கிஷ்கிந் தாக்யே' என்று தொடங்கும் ஒரு ச்லோகத்தினால்.

ச்லோகம் 14:

கிஷ்கிந்தாக்யே ச காண்டே ச்ருதி சிகரகதைர் துர்லபத்வாப்ரமேய-த்வாத்யைர் தர்மை ரகம்ப்யைரநிதர கதிகைஸ் தாரயோக்தைரநேகை: ‖ ஸாதூநாம் த்ராணஹேதோர் தசரத தநயத்வேந விச்வம்பராயாம், ஜாதம் காந்தம் ரமாயா: அசகதத பரம் ப்ரஹ்ம வல்மீகஜந்மா ‖

பதவுரை:

வல்மீக ஜந்மா=புற்றில் உதித்த வால்மீகி முனிவர், ஸாதூநாம் த்ராணஹேதோ:=நல்லோரைக்காப் பாற்றுதல் காரணமாக, விச்வம்பராயாம்=பூவுலகில், தசரத தநயத்வேந ஜாதம்=தசரதனுக்கு மகனாகத் தோன்றிய, ரமாயா: காந்தம்=திருவின் மணாளனை திருமாலை, கிஷ்கிந்தா, ஆக்யே காண்டே=(கிஷ்கிந்தையில் நடந்த சரிதத்தைத் தெரிவிப்பதனால்) கிஷ்கிந்தை என்று பெயர் பெற்ற காண்டத்தில், தாரயா உக்தை:=தாரையினால் சொல்லப் பட்டவைகளும், ச்ருதிசிகர கதை:= மறை முடியான உபநிஷத்துக்களில் உள்ளவைகளும், அப்ரகம்ப்யை:= அசைக்க முடியாதவைகளும், அநிதர கதிகை:=வேறொருவரிடம் பொருந் தாதவைகளுமான, துர்லபத்வ அப்ரமேயத்வ ஆத்யை:=தன் முயற்சியினால் அடைய முடியாமை நமது பொறிகள் வாயிலாக அறிய முடியாமை முதலான, அநேகை: தர்மை:=பல பண்புகளாலே, பரம் ப்ரஹ்ம=பரப்ரஹ்மமாக, அசகதத= கூறினர்.

விசேடவுரை:

கிஷ்கிந்தா காண்டம் இருபத்து நான்காம் ஸர்க்கத்தில் 'த்வமப்ரமேய: ச துராஸத: ச ஜிதேந்த்ரிய: ச உத்தமதார்மிக: ச | அக்ஷய்ய கீர்த்தி: ச விசக்ஷண: ச க்ஷிதிக்ஷமாவாந் க்ஷதஜோபமாக்ஷ: ‖ (31) என்பது இராமபிரானைக் குறித்துத் தாரை கூறிய வசனம். இராமா நீ பொறிகளால் அளவிட்டு அறிய முடியாதவன், எவ்வுபாயத்தாலும் அடைய முடியாதவன், பொறிகளை வென்றவன், உயர்ந்த தருமத்தையாசரிப்பவன், குறையாத புகழ்படைத்தவன், திறமை வாய்ந்தவன், பூமியோடு ஒத்த பொறுமை படைத்தவன், குருதி போல் சிவந்த கண்களையுடையவன்-என்பது இந்த ச்லோகத்தின் பொருள். இதிலுள்ள எல்லாச் சொற்களாலும் தெரிவிக்கப்பட்ட தன்மைகள் அனைத்தும் 'துர்லபத்வ அப்ரமேயத்வாத்யை:' என்ற பதத்தினால் இங்குச் (இப்பதினான்காவது ச்லோகத்தில்) சுருக்கமாகத் தழுவப் பெற்றுள்ளன. அவற்றுள்ளும் துராஸத அப்ரமேய என்ற இரண்டு பதங்களால் கூறப்பட்ட இரண்டு தன்மைகள் இங்கு துர்லபத்வ அப்ரமேயத்வ என்ற இரண்டு சொற்களால் குறிக்கப்பட்டன. மற்ற தன்மைகள் ஆத்ய என்ற சொல்லால் சுருக்கமாகக் கூறப்பட்டன.

அவற்றில் அப்ரமேயத்வமாவது— பொறிகளால் அறிய முடியாமை. அஃதோவெனில் பரப்ரஹ்மத்திற்கே உரியதொரு தன்மையாகும்; 'ஸோ அங்க வேத யதிவா ந வேத' (அஷ்டக-2, ப்ரச்நம்-8, அனுவா-9.) அந்த எம்பெருமான் தானும் தன் பெருமையை உள்ளபடி அறிவானோ அறிய மாட்டானோ-என்ற ச்ருதியினால் பகவானுடைய ஸ்வரூபம் பகவானாலும் அறிய முடியாமை கூறப்படுவதனாலும், 'க இத்தா வேத யத்ர ஸ:' (கட 1-2-25) சராசரங்கள் அனைத்தையும் பிரளயத்தில் விழுங்கும் அப் பரமாத்மா எத்தன்மையில் நிலை பெற்றுள்ளானோ அத்தன்மையை இப் படிப் பட்டதென்று யார் அறிவார்'?-

தமிழாக்கம்:
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி.

என்று வேதங்களாலும் ப்ரஹ்மம் அளவிட்டறிய முடியாமை கூறப்படுவதனாலும், 'மிகவும் நல்லோனே பரமாத்மா உன்னாலோ என்னாலோ பிறராலோ காண முடியாதவன். நற்குணமுடையவனும் தீயகுண மற்றவனும் எல்லாப் பொருள்களுமாக இருப்பவனுமாகிய அப்பரமாத்மா ஞானக் கண்ணால் காணத்தக்கவனாக அல்லவா கருதப்பட்டுள்ளான்' என்று மஹா பாரதத்திலுள்ள-ப்ரஹ்மாவுக்கும் சிவபிரானுக்கும் நடந்த ஸம்பாஷணப் பகுதியைச் சேர்ந்த ப்ரஹ்மாவின் பேச்சால் பரப்ரஹ்மம் இந்திரியங்களுக்கு எட்டாததென்று சொல்லப்படுவதனாலும், 'உனக்கும்

# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | ரூ. காசு. |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. கண்ணன் பேசுகிறான் —நஜன் | 0—50 |

## சம்ஸ்கிருதம்

| | |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செயலாட்சித் தலைவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

எனக்கும் அந்தராத்மாவாய் (=உள்ளிருந்து நியமிப்பவனாய்) உடம்பு படைத்தவர்களென்று பெயர் பெற்ற மற்றெல்லோரையும் நேராகக் காண்பவனாக உள்ள அப்பரமாத்மா ஒருவராலும் அறியப்படான்' (பாரமோக்ஷ 179-4) என்று அறிய முடியாமை கூறப்படுவதனாலும்-என்க.

துராஸதத்வமாவது-அடைய முடியாமை. அது 'இப்பரமாத்மா-சிஷ்யன் குருவனிடம் (பகவானைப்பற்றிக்) கேட்டறிகையாகிற ச்ரவணம், அங்ஙனமறிந்தவற்றை யுக்திகளைக் கொண்டு ஆராய்ந்து அறுதியிடுவதாகிற மனனம், அப்படி அறுதியிட்ட பகவானையும் அவன் குணங்களையும் இடையறாது த்யானம் செய்கையாகிற நிதித்யாஸநனம் என்னும் இவற்றினால் மட்டும் அடையத் தக்கவனல்லன், பின்னையோவெனில்-எவனை இப்பரமாத்மா தான் அருள் செய்தற்காகத் தேர்ந்தெடுக்கிறானோ அவனால் மட்டுமே இப்பரமாத்மா அடையத் தக்கவன்' (முண்டக 3-2-3) என்றிது முதலான ச்ருதிகளாலும் மற்றுமுள்ள ஸ்ம்ருதிகளாலும் பரப்ரஹ்மத்தின் தனித்தன்மையாக அறியப் பட்டது.

ஜிதேந்த்ரியத்வமாவது-பொறிகளை வென்றமை. பொறிகளின் உதவியில்லாமல் எல்லாப் பொருள்களையும் காணவல்லவனாயிருக்கை என்றபடி. அதுவும் 'கண்ணில்லாமலேயே காண்கிறான், காதில்லாமலேயே கேட்கிறான், கையில்லாமலேயே ஒரு பொருளை எடுக்கிறான், காலில்லாமலேயே விரைவாக ஓடுகிறான்'. (ச்வேதா 3-19) என்றிது முதலான ச்ருதிகளாலும் ஸ்ம்ருதிகளாலும் பரப்ரஹ்மத்தின் தனித்தன்மையாக அறியப்பட்டது.

உத்தமதார்மிகத்வமாவது-தனக்கு ஒரு பயனையும் விரும்பாமல் பிறரது பயனுக்காகவே முயற்சி செய்யும் தன்மை. அதுவும் 'நல்லோர்களைக் காப்பதற்காகவும் அவர்களுக்குப் பகைவரான தீயோரைத் தொலைப்

பதற்காகவும் இவற்றின் வாயிலாகத் தருமத்தை நிலைநாட்டுதற்காகவும் ஒவ்வொரு யுகத்திலும் பிறக்கிறேன்' (கீதை 4-14) என்றிது முதலியவற்ருல் பகவானுக்கே தனிப்பட்ட தன்மையாகக் கூறப்பட்டது.

அக்ஷய்ய கீர்த்தித்வமும் 'மிகப் பெரிய கீர்த்தி பகவானுடையதேயன்ருே?' (தை-நாரா. 10) என்று பகவானுக்கே உரியதாகச் சொல்லப் பட்டது.

விசக்ஷணத்வமென்னும் திறமையுள்ளமையும், தனக்கு ஒப்பதும் மிக்கதுமான வேறென்றில்லாதவையாய் தடையற்றவையாய் எல்லா வகையான சக்திகளோடு கூடியிருப்பதனுலே பரப்ரஹ்மத்திற்கே உரியதொரு தன்மையாகும். அல்லது விசக்ஷண சப்தம் பண்டிதனைக் குறிக்கும் மற்ருெரு சொல்லாக நிகண்டுகாரர்கள் படித்துள்ளமையால், விசக்ஷணத்வமாவது அறிவுடைமையாகையாலே, ஒன்றையும் விடாமல் அனைத்தையும் அறியுந்தன்மையாகிற அத்தகைய ஸர்வஜ்ஞத்வம் 'எவன் எல்லாப் பொருள்களையும் அறிகிருனே, எவன் அப்பொருள்களின் எல்லாத் தன்மைகளையும் அறிகிருனே' (முண்டக 1-1-10) என்றிது முதலியவற்ருல் பரப்ரஹ்மத்திற்கே உரிய தன்மையென்பது ஸ்பஷ்டமாயிற்று.

க்ஷிதிக்ஷமாவத்த்வமாவது - பூமியைப் போன்ற பொறுமையை உடைமையாகும். அது எல்லாவற்றையும் பொறுக்குமியல்பை யுடையவனுகையாலே பகவானுக்கே உரியதன்மையாகும்.

க்ஷதஜோபமாக்ஷத்வமென்பது செந்தாமரை போன்ற திருக்கண்களையுடைமையைச் சொன்னதாக முடியும். அது - 'நீரிலேயிருந்து கொண்டு தண்டை விட்டுப் பிரியாமல் சூரியனுல் அலர்த்தப்பட்ட தாமரை மலர்கள் எத்தகையனவோ அத்தகையன- அப்பரமனின் திருக்கண்கள்' (ச்சாந்தோக்யம் 1-6-7) என்றிது முதலிய ச்ருதியினுல் ப்ரஹ்மத்தின் தனித் தன்மையாக அறியப்பட்டது. அல்லது ரோஹிதாக்ஷத்வமாகவே (=சிவந்த கண்களையுடைமையாகவே) அது இருக்கட்டும். அதுவும் 'பக்தர்களை அருள் மழையால் குளிரச் செய்பவனும் அன்பினுல் சிவந்த கண்களையுடையவனும் எல்லாமறிந்தவனும் மக்களைக் கருமங்களில் தூண்டுமவனும் அல்லது ஸூர்யனுக்கு அந்தர்யாமியுமான அப்பரமாத்மா என்னைத் தூயனுக்குக' மாத்யாஹ்நிகமந்திரம் என்ற ச்ருதியின்படி ப்ரஹ்மத்தின் தனித் தன்மையேயாகும்.

முற்கூறிய அப்ரமேயத்வம் முதலிய இத்தன்மைகளெல்லாம் இராமனுக அவதரித்த விஷ்ணுவினிடம் கூறப் பட்டமையால் இவை அப்பெருமானுக்குப் பரப்ரஹ்மத்வத்தை அறிவிக்கின்றன.

இங்ஙனம் கிஷ்கிந்தா காண்டத்திலுள்ளனவாய் விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மத்வத்தைச் சாதித்துத் தருகின்ற எட்டுக் காரணங்களைத் தொகுத்துக் கூறி, 'காண்டே' என்றும் 'ஸர்வேஷாம்' என்றும் தொடங்கும் இரண்டு ச்லோகங்களாலும் யுத்தகாண்டத்திலுள்ள அத்தகைய காரணங்களைத் தொகுத்துரைக்கிருர்.

(இந்நூலாசிரியர் கிஷ்கிந்தா காண்டத்திற்குப் பின்பு ஸுந்தர காண்டத்திலுள்ள காரணங்களைக் கூருமலே யுத்த காண்டத்திற்குச் சென்றது ஏன்? என்பது தெரியவில்லை.)

ச்லோகம் 15, 16 :

காண்டே ஷஷ்டே முநீந்த்ரஸ் ஸரஸிஜநயனம் காரணத்வாத் ஜகத்யா:, ஸ்வாதந்த்ர்யாத் வைச்வ ரூப்யாதபி நிகில ஜகத்ஸம்ஹ்ருதேர் வ்யாபகத்வாத் | ஸர்வஜ்ஞாத்வாத் அநந்தேக்ஷண சரணசிரோவத்த்வதஸ் ஸர்வ யஜ்ஞா—ராத்யத்வாத் புண்டரீகப்ர பநயநதயா வேத ஸம்ஸ்காரவத்த்வாத் ||

ஸர்வேஷாம் தாரகத்வாத் ஸலில சயநதஸ்ஸத்யதாऽநாமயத்வா - வ்யக்தத்வை: பூருஷத்வாத் ச்ருதிவிஹித தம:பாரவர்த்தித்வத: ச | ப்ரஹ்மேத்யம்போஜயோநி ப்ரமதபதிமுகைர் நிர்ஜரை: ஸ்பஷ்டமுக்தே:, வால்மீகிர் ப்ரஹ்ம வேதோதித பரம மஹத்த்வாச்ரயத்வாத் பரம் தத் ||

பதவுரை :

வால்மீகி: முநீந்த்ர:=வால்மீகியாகிய முனிவர் பெருமான், ஷஷ்டே காண்டே=ஆருவதான யுத்த காண்டத்தில், ஜகத்யா: காரணத்வாத்= உலகிற்குக் காரணமாயிருப்பதனுலும், ஸ்வாதந்த்ர்யாத்=சுதந்திரத் தன்மையினுலும், வைச்வரூப்யாத்= உலகனைத்தையும் தனக்கு உடலாகக் கொண்டிருப்பதனுலும், நிகில ஜகத் ஸம்ஹ்ருதே:=எல்லாவுலகையும் ஸம்ஹாரம் செய்வதனுலும், வ்யாபகத்வாத் = உலகமெங்கும் பரந்திருப்பதனுலும், ஸர்வஜ்ஞத்வாத் = அனைத்தையும் அறிவதனுலும், அநந்த ஈக்ஷண - சரண - சிரோவத்த்வத:=எண்ணற்ற கண்கள் கால்கள் தலைகள் இவற்றையுடைமையினுலும், ஸர்வ யஜ்ஞ ஆராத்யத்வாத்= எல்லா யாகங்களாலும் ஆராதிக்கத் தகுதி பெற்றிருப்பதனுலும், புண்டரீக ப்ரப நயநதயா=தாமரை மலர் போல் ஒளிபெற்ற கண்களையுடைமையினுலும், வேத ஸம்ஸ்காரவத்த்வாத் =வேதங்களை மூச்சுக்காற்ருகக் கொண்டமையினுலும், ஸர்வேஷாம் தாரகத்வாத்=எல்லாப் பொருள்களையும் தாங்குவதனுலும், ஸலிலசயனத:= கடல் நீரில் சயனித்திருப்பதனுலும், ஸத்யதா - அநாமயத்வ - அவ்யக்தத்வை:=மாருமல் எப்போதும் ஒரு படிப்பட்டிருக்கை - உடலிலும் உள்ளத்திலும் ஒரு வகையான நோயுமில்லாதிருக்கை - பக்தியில்லாதவர்களால் அறிய முடியாதிருக்கை ஆகியவற்ருலும், பூருஷத்வாத்=உயிர்களனைத்தின் உள்ளங்களிலும் உறைவதனுலும், ச்ருதி விதித தம: பார வர்த்தித்வத:=பிரகிருதி மண்டலத்திற்கு (—கீழே பாதாளந் தொடங்கி மேலே ஸத்ய லோகம் வரையிலுண்டான

உலகங்களைக் கொண்ட அண்டங்களெல்லாவற்றுக்கும்) அப்பாலிருப்பதாக வேதங்களாலறியப்படுதலாலும், அம்போஜயோநி ப்ரமதபதிமுகை:= நான்முகன் சிவபெருமான் முதலான, நிர்ஜரை:=தேவர்களால், ப்ரஹ்ம இதி=பரப்ரஹ்மமென்று, ஸ்பஷ்டம் உக்தே:=விளக்கமாகச் சொல்லப்படுதலாலும், வேதோதித பரமமஹத்த்வ ஆச்ரயத்வாத்=எல்லாவற்றைக்காட்டிலும் பெரிதாயிருக்கையாகிற பேரளவுக்கு இருப்பிடமென்று வேதங்களால் கூறப்படுகையாலும், ஸரஸிஜ நயநம் = தாமரைக் கண்ணனை (இராமபிரானென்னும்) திருமாலை, தத் பரம்ப்ரஹ்ம=பிரசித்தி பெற்ற பரப்ரஹ்மமாக, அவதத்=கூறினர்.

விசேடவுரை :

இவ்விரண்டு ச்லோகங்களும் சேர்ந்து ஒரே பொருளைக் குறிப்பனவாகும். வால்மீகியாகிய முனிவர் பெருமான் ஆறுவது காண்டத்தில் தாமரைக் கண்ணனை திருமாலை பிரசித்தமான பரப்ரஹ்மமாகக் கூறினர் என்று கொண்டு கூட்டுக.

ஜகத்யா: காரணத்வாத்-எல்லாவுலகின் தோற்றத்திற்கும் காரணமாயிருப்பதனுல் என்பது இதன் பொருள். எல்லாவுலகத்தின் உற்பத்திக்கும் மூலமாயிருப்பதென்பது பரப்ரஹ்மத்தின் தனிப்பட்டதொரு தன்மையாகும். அவ்வாறேயன்றோ தைத்திரீயோபநிஷத்தில், ப்ருகுவல்லியில் முதலநுவாகத்தில் 'எதனுல் இந்தப் பிராணிகள் உண்டாகின்றனவோ, உண்டானவை எதனுல் உயிர் வாழ்கின்றனவோ, உயிர் வாழ்ந்த அவை மரணத்தை அல்லது மோக்ஷத்தை அடைபவைகளாய்க் கொண்டு எதனைப் பிரவேசிக்கின்றனவோ (-எது தன்னில் லயமடைகின்றனவோ) அது தான் ப்ரஹ்மம். அப்படிப்பட்ட ப்ரஹ்மத்தை த்யானம் செய்வாயாக' என்று-கேட்கப்படுகிறது.

இங்கு 'எதனுல் இப்பிராணிகள் உண்டாகின்றனவோ அது ப்ரஹ்மம்' என்று கூறப்பட்டுள்ளதனுல், உலகப் பிறப்பிற்குக் காரணமாயிருக்குந் தன்மை ப்ரஹ்மத்திற்குச் சொல்லப் பட்டதாயிற்று.

கேள்வி :

ஐயா, இந்த ச்லோகத்தில் 'ஜகத்யா: காரணத்வாத்' என்று உலகத் தோற்றத்திற்குக் காரணமாயிருத்தலை மட்டும் பரப்ரஹ்மத்திற்கே உரிய தன்மையாகக் கூறியுள்ளது பொருந்தாது; 'எதனுல் உண்டாகின்றனவோ, எதனுல் பிழைத்திருக்கின்றனவோ எதில் லயமடைகின்றனவோ' என்ற மூன்று ச்ருதி வாக்கியங்களாலும் உலகத்தின் பிறப்பு இருப்பு இறப்பு என்ற மூன்றினையும் குறிப்பிட்டு, 'அது ப்ரஹ்மம்' என்று-முற்காட்டிய 'எதனுல் எதனுல் எதில்' என்ற மூன்று சொற்களுக்கும் சேர்த்து, (அவற்றின் எல்லாப் பொருள்களையும் தழுவுதற்காக)'அது' என்று ஒரு சொல்லையே குறிப்பிட்டு அது கொண்டு உலகின் பிறப்பிருப்பிறப்புக்களென்னும் ஸமுதாயத்திற்குக் காரணமாயிருத்தலைச் சொல்லி அதையே ப்ரஹ்மத்தின் லக்ஷணமாகக் (அடையாளமாக, தனித்தன்மையாகக்) கூறுதலாலும், ஸூத்ரகாரரான வேதவ்யாஸ பகவான் 'ஜந்மாதி அஸ்ய யத:' ப்ரஹ்ம ஸூ 1-1-2) காணப்படுகின்ற இவ்வுலகிற்கு, பிறப்பு முதலியவை எதனுல் உண்டாகின்றனவோ அது ப்ரஹ்மம்-என்று ஸூத்ரம் செய்பவர் 'முதலியவை' என்ற சொல்லால் இருப்பிறப்புக்களையும் தழுவி, அத்தகைய உலகின் பிறப்பு இருப்பு இறப்புக்களாகிய ஸமுதாயத்தைக் குறித்துக் காரணமாயிருத்தலையே ப்ரஹ்மத்தின் லக்ஷணமாகக் கூறியுள்ளதனுலும், பகவத் பாஷ்யகாரராகிய ஸ்ரீராமாநுஜ முனிவரும் முற்காட்டிய ஸூத்ரத்திலுள்ள 'ஜந்மாதி' என்ற பதத்திற்குத் தத்குண ஸம்விஜ்ஞாந பஹுவ்ரீஹிஸமாஸத்தைச் சொல்லி (=விசேஷ்யமும் விசேஷணமும் அதாவது அடைகொளியும் அடையும் ஆகிய இரண்டும் பயனிலையில் சென்று பொருந்து தற்கேற்பச் சொல்லும் ஒரு வகையான அன்மொழித் தொகையைச் சொல்லி) 'ஸ்ருஷ்டி ஸ்திதி ப்ரளயங்கள்' (=பிறப்பிருப்பிறப்புக்கள்) என்று உரை செய்து, இம்மூன்றும் சேர்ந்த ஸமுதாயத்தைக் குறித்துக் காரணமாயிருத்தலையே ப்ரஹ்மத்தின் லக்ஷணமாகக் கூறியுள்ளதனுலும், உலகப் பிறப்பின் காரணமாயிருத்தல்-இருப்பின் காரணமாயிருத்தல்-இறப்பின் காரணமாயிருத்தல் என்ற இம்மூன்றில் ஏதாவது ஒன்று மட்டுமே ப்ரஹ்மத்தின் தனித்தன்மையாக-லக்ஷணமாக இருக்குமாயின், அத்தகைய ஒன்றே ப்ரஹ்ம லக்ஷணமாயிருக்கத் தகுதியுள்ளமையால், கீழ்க்காட்டிய உபநிஷத்தும் ஸூத்ரமும் அதற்கு பாஷ்யகாரர் பணித்த உரையும் பொருந்தாமற் போய் விடுமாதலாலும்-என்க. ஆகையால் இந்த ச்லோகத்தில் உலகப் பிறப்புக்கு மட்டும் காரணமாயிருத்தலை ப்ரஹ்ம லக்ஷணமாகக் குறித்துள்ளது சேராது-என்று ஒரு கேள்வி இங்கு எழுகின்றது.

(தொடரும்)



# வேங்கடவன் கடன் பட்ட வரலாறு

மந்திபாய் வடவேங்கட
மாமலே வானவர்கள்
சந்திசெய்ய நின்ருன் அரங்கத்து
ஆவி அனேயான்
அந்திபோல நிறத்து ஆடையும்
அதன்மேல் அயனேப்படைத்தோ
ரெழில்
உந்திமேலதன்றே அடியேனுள்ளத்
தின்னுயிரே .
— *திருப்பாணுழ்வார்*



திருப்பதி அலிபரி (திருமலேயடிவாரம்)
திரு. ஜி. வி, ரமணராவ்,

*மும்மூர்த்திகளில் யார் சிறந்தவரோ அவருக்கு யாகத்தில் ஹவிர் பாகம் அளிப்பது என்று முனிவர்கள் முடிவு செய்கின்றனர். யார் சிறந்தவர் என்பதை நிர்ணயிக்கும் பொறுப்பு பிருகு முனிவரிடம் ஒப்படைக்கப்படுகிறது.*

இவர் முதலில் பிரும்மாவைப் போய்ப்பார்த்தார். சரஸ்வதி சாவித்திரியுடன் இருந்த பிரும்மா இவரைக் கவனிக்கவேயில்லே. கைலாசத்தில் அம்மையும் அப்பனும் ஒன்றியிருந்த சுவாரஸ்யத்தில் இவர் வந்தது அவர்களுக்குத் தெரியவேயில்லே. வைகுண்டத்தில் லக்ஷ்மி தேவி கால்வருட, மகாவிஷ்ணு அரிதுயில் கொண்டிருந்தார். முனிவருக்கு என்ன தோன்றிற்றே விஷ்ணுவின் மார்பில் எட்டி உதைத்தார்.

துயில் கலேந்த விஷ்ணு சிறிதும் கோபம் கொள்ளாமல் "அடடா! முனிவர் வந்ததைக் கவனிக்கவில்லேயே! மார்பில் உதைத்ததால் கால் வலித்திருக்குமே" என்று முனிவரின் காலேப் பிடித்து விட்டார். பிருகு முனிவர் மகாவிஷ்ணு செயலேக்கண்டு பிரமித்தே போனுர். (மூவரில் மகாவிஷ்ணுதான் சிறந்தவர் என்று அவர் சிபார்சு செய்தார் என்பதை சொலலவும் வேண்டுமா?) நடந்தது எல்லாவற்றையும் லக்ஷ்மி பார்த்துக் கொண்டே இருந்தாள். விஷ்ணுவின் மார்பு அவள் வாசஸ்தலம் இல்லேயா? முனிவர் உதைத்ததையும் அவள் லட்சியம் செய்யவில்லே. ஆனுல் அப்படி உதைத்தவரின் காலே வலிக்குமே என்று பிடித்துவிடும் கணவரின் போக்குதான் அவளுக்குப் பிடிக்கவில்லே. பகவான் என்ன சமாதானம் கூறியும் ஏற்க மறுத்து பூலோகத்திற்குத்தவம் செய்யச் சென்ருள்.

தன் தேவியைப் பிரிந்திருக்க விரும்பாத பகவான் தானும் பூலோகம் சென்று திருமலேயில் வராஹப்பெருமான் வாசஸ்தலமான திருமலேயில் ஒரு புளிய மரத்தின் கீழுள்ள புற்றில் இடம் கொண்டார். புற்றினுள் முடங்கியுள்ள விஷ்ணுவையும் லக்ஷ்மியையும் சேர்த்து வைக்க பிரும்மாவும் சிவனும் லக்ஷ்மியின் இருப்பிடம் வந்தனர். சிவன் பசுவாகவும், பிரும்மா கன்ருகவும் மாறினர். லக்ஷ்மிதேவி இடைச்சியாக மாறி சந்திரகிரி மன்னனிடம் சென்று மாட்டையும் கன்றையும் விற்ருள். இம்மாடு தினம் மேயச் சென்றபோது அந்தப் புற்றில் தாளுகவே பாலே சுரந்துக் கொட்டியது. ஒரு நாள் இதைக்கண்ட இடையன் தன் கையிலிருந்து கோடாரியால் பசுவைத் தாக்கினுன். அதே சமயம் புற்றிலிருந்து வெளிப்பட்ட பகவான் கோடரியைத் தன் மீது ஏற்று பசுவைக் காத்தருளினுர். இடையன் மூர்சித்து விழுந்தான். வீடு திரும்பிய பசுவின் மீது ரத்தக்கறையைக் கண்ட அரசன் அதைப் பின் தொடர்ந்து புற்றிடம் வந்து சேர்ந்தான். பகவான் புற்றிலிருந்து வெளிப்பட்டு குடிமகன் தவறு அரசனேயே சேரும் என்று கூறி 'பிசாசாக அலேவாயாக' என்று சாபமிட்டு விட்டார்.

அரசன் தன் தவறுக்காக வருந்தி சாப விமோசனம் கேட்க, "அடுத்தப் பிறவியில் ஆகாசராஜன் என்ற பெயரோடு பிறப்பாய். உன் குமாரத்தி



அலிபிரி கோயில் தோற்றம் — திரு. டி எஸ். திருவேங்கடம்.

யை மணந்து உனக்கு பெருமையளிப்பேன்'' என அருளினூர்.

மறுபிறவியில் ஆகாசராஜனுக இம் மன்னன் பிறக்கிருன். ஏர் உழும் போது பூமியிலிருந்த பெட்டி ஒன்றில் தாமரை மலரில் ஒரு பெண் குழந்தைக் கிடைக்கிறது. அவளுக்குப் பத்மாவதி என்று பெயரிட்டு வளர்க்கிருன்.

பகவான் பத்மாவதியைச் சந்தித்துக் காதல் கொள்கிருர்.

திரேதாயுகத்தில் வேதவதி என்கிற பேரழகு மங்கை ஸ்ரீமந்நாராயணனை மணுளனுக அடைய விரும்பி கடுந் தவம் இயற்றினுள். லோக சஞ்சாரம் செய்துவந்த ராவணன் அவளைக் கண்டதும் மோகவசமானுன். வேதவதி தான் பகவானுக்கே உரியவள் என்று கூறி அவனுடைய துராசைக்கு இணங்க மறுத்தாள். ராவணன் பலவந்தமாக வேதவதியை பற்ற இயல, வேதவதி ''பெண்ணுலேயேஉன் குலமும் அழிந்து நீயும் நாசமாவாய்'' என்று சபித்துவிட்டுத் தீக்குளித்தாள்.

அக்னி தேவன் அவளை அழைத்துச் சென்று தன் மனைவியிடம் ஒப்படைத்தான்.

கானகவாசம் செய்த ராமனைப் பிரித்து சீதையைக் கவர்வதற்காக ராவணன் மாய சந்நியாசி வேடத்துடன் வந்து பிக்ஷை கேட்கிருன்.

ராவணன் சீதையைக் கவர்ந்து செல்லும்போது அக்னிதேவன் குறுக்கிட்டுத் தன்னிடமிருந்த வேதவதியைக் காட்டி ''இவளே உண்மையான சீதை இவளை எடுத்துச் செல்'' என்கிருன். அதை உண்மை என்று நம்பிய ராவணன் அவளை எடுத்துச் சென்று அசோக வனத்தில் சிறை வைக்கிருன்.

வேதவதியின் சாபம் காரணமாக ராவணன் குலம் அழிந்தது. ராவணனும் கொல்லப்படுகிருன். சீதை களங்க மற்றவள் என்பதை உலகறியச் செய்ய அக்கினிப் பிரவேசம் செய்யும்படி ராமன் சீதைக்குக் கூறுகிருர்.

அக்னிதேவன் சீதை, வேதவதி இருவருமே களங்க மற்றவர்கள் என்று கூறி இருவர்களையும் ராமனிடம் ஒப்படைத்து சீதாதேவிக்குப் பதில் ராவணனிடம்' சிறை இருந்தவள் வேதவதியே என்பதையும் பகவானை மணம் புரியவே வேதவதி தவம் இருந்தாள் என்பதையும் அக்னி விளக்குகிருன்.

ராமன் தான் ஏகபத்தினி விரதம் ஏற்றதால் மறு அவதாரத்தில் வேதவதியை மணந்து வாழ்வளிப்பதாகக் கூறுகிருர். இந்த வேதவதியே பத்மாவதி.

### பத்மாவதியின் பிறப்பும் திருமணமும்

கிருஷ்ணுவதாரத்தின்போது கிருஷ்ண பகவானின் வளர்ப்புத் தாயான யசோதை, வகுளமாலிகை என்றபெயருடன் பகவானின்சேவைக்காக சேஷாசலத்தில் வந்து காத்திருந்தாள். பகவானைச் சந்தித்து அவருடனேயே தங்கினுள்.

சாப விமோசனம் பெற்ற சோழ மன்னன் ஆகாசராஜனுகப் பிறந்து நாராயணபுரத்தை ஆட்சி செய்து வந்தான். அவன் தன் குலகுரு சுகப் பிரும்மத்தின் யோசனைப்படி யாக சாலை ஏற்படுத்த நிலத்தை உழுத போது பெட்டி யொன்று கிடைக்கிறது. அதில் தாமரை இதழ்களின் மேல் அழகிய குழந்தையைக் கண்டு வாரி எடுத்தான். அவளே லக்ஷ்மி தேவியான பத்மாவதி. (பத்மத்துடன் பிறந்ததால் அப்பெயர் வைக்கப்பட்டது) இவள் ஆகாசராஜனுல் வளர்க்கப்பட்டு பருவநிலையை அடைகிருள்.

ஒரு நாள் பகவான் குதிரை மீது ஏறி மதங்கொண்ட யானை யொன்றைத் துரத்தித்திரும்புகையில் பத்மாவதியைக் காண்கிருர். அவள் மீது மையல்கொண்டு தன்னை மணக்கும்படி வேண்டுகிருர். தான் மணக்க விரும்பும் பகவான்தான் அவர் என்பதை அறியாமல் பத்மாவதி மறுக்கிருள். பின் உண்மை தெரிந்து இசைகிருள்.

ஆகாசராஜன் பெண் பத்மாமதியை பகவான் மணக்க சகல ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. மகாலக்ஷ்மி பிரிந்துபோனதால் செல்வம் இல்லாத நிலையில் திருமணச் செலவுக்காக பணத்திற்கு என்ன செய்வது என்ற கவலை பகவானுக்கு இருந்தது. (அப்போது இப்போதுள்ளதுபோல பெண்ணுக்கு வரதக்ஷிணை கொடுத்து

திருமணம் செய்யும் வழக்கம் இல்லை போலிருக்கிறது).

தேவர்கள் சகல ஏற்பாடுகளையும் செய்து வைக்க சம்மதித்தனர். திருமணச் செலவுக்கு குபேரனிடம் கடன் கேட்க முடிவு செய்யப்பட்டது. குபேரனும் கடன் கொடுக்க இசைந்தான்.

கலியுகம் முடியும் வரை வட்டி கொடுத்து வருவதாகவும் முடிவில் முதல் பூராவையும் கொடுத்து விடுவதாகவும் பகவான் குபேரனுக்குக் கடன் பத்திரம் எழுதிக் கொடுத்தார். பிரும்ம தேவனும் சுவாமி புஷ்கரிணிக் கரையிலுள்ள அரசமரமும் சாக்ஷிக் கையெழுத்துக்கள் போட்டனர். பகவான் குபேரனிடம் ஒரு கோடியே பதினன்கு லக்ஷம் தங்க நாணயங்களைக் கடனுகப் பெற்ருர். திருமண ஏற்பாடுகள் துரிதமாக நடைபெற்றன.

திருமண வைபவம்

லக்ஷ்மி தேவியை அழைத்து வரச் செய்து வேதவதிக்கு ராமாவதாரத்தின் போது கொடுத்த வாக்கை எடுத்துக்கூறி பத்மாவதியை மணக்க அனுமதி கோரினுர் பகவான். லக்ஷ்மியும் சம்மதித்தாள். மணநாளன்று லக்ஷ்மி மணமகளையும் பார்வதி மணமகனையும் அலங்கரித்தனர்.

குறித்த நேரத்தில் திருமணச் சடங்குகள் தொடங்கின. மணமக்களுக்குப் பாலும் பழமும் கொடுத்து மந்திரங்களை ஓதுவித்தார் குலகுரு. பத்மாவதிக்கும் கூறைப் புடவை முதலானவற்றை அணியச் செய்தார். அடுத்தபடியாக ஆகாசராஜனும், தாரணீதேவியும் ஸ்ரீநிவாசனுக்குப் பாத பூஜைசெய்யத் தொடங்கினர்.

பாதபூஜை முடிந்த பிறகு அத்தூய திருவடி நீரைத் தனது சிரசிலும் மனைவி மக்கள் சிரசிலும், உற்ருர் உறவினர் சிரசிலும் தெளித்தான். அதன்பிறகு ஆகாசராஜன் ஸ்ரீமானின் பாதத்தைத் துடைத்து உள்ளன்போடு வழிபாடுகள் புரிந்தார். தலைமீது கரம் உயர்த்தி, "பிரபோ! நான் எப்பிறப்பில் எத்துணை நற்பயனைச் செய்தேனே, இப்பிறவியில் இத்தகைய பெரு வாழ்வு பெற்றேன்' என்று கூறி நமஸ்கரித்தார். ஸ்ரீநிவாசன் ஆகாசராஜனை வாழ்த்தி அருளினுர்.

பின்னர் சப்தரிஷிகள் ஹோமங்களை வளர்த்திட, விசிஷ்டரும், பிரகஸ்பதியும் வேத விதிப்படி ஒவ்வொரு காரியத்தையும் நடத்தத் தொடங்கினர். பிரகஸ்பதி ஸ்ரீநிவாசனைப் பார்த்து, "பிரபோ! அத்திரி கோத்திரத்தில் பிறந்தவளும் சுவீரனுடைய கொள்ளுப் பேத்தியும், சுதமருடைய பேத்தியும், ஆகாசராஜனுடைய புத்திரியுமாகிய பத்மாவதியை ஏற்றுக் கொண்டு திருவருள் புரிவோம்" என்று அருளினுர். பின்னர் இருவரும் மாலைமாற்றிக் கொண்டனர். விண்ணவர் வண்ண மலரை மழை எனப் பொழிந்தனர்.

ஆகாசராஜன் ஸ்ரீநிவாசனுக்குச் சீர்வரிசைகளை காணிக்கையாகச் செலுத்தி அவரது திருமுன் அவற்றைச் சமர்ப்பித்தான். சீர்வரிசைகளை வர்ணிக்க வார்த்தைகள் கிடையா. அவ்வாறு பற்பல விதமான சீர்வரிசைகளைச் செய்து அரசன் ஸ்ரீநிவாசனைக் கௌரவித்தான்.

சீர்வரிசையை அளித்து முடித்ததும் அடுத்து நடக்க வேண்டிய திருமணக்கட்டம் தொடங்கியது.

நமது நாட்டில் விவாகங்களில் பெண், பிள்ளை இவர்களுடைய கோத்திர விவரங்களைக் கூறியபின் வரனை ஸாக்ஷாத் நாராயண ஸ்வரூபியாகவும், கன்னிகையை சாக்ஷாத் மகாலக்ஷ்மியாகவும் பாவித்து கன்யாதானம் செய்யும் வழக்கம் உள்ளது.

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமான ஸ்ரீனிவாசன் பத்மாவதி இவர்களுடைய கோத்திர விவரங்கள் பவிஷ்யோத்தர புராண சுலோகங்களை ஆதாரமாகக் கொண்டு இங்கு விவரிக்கபட்டுள்ளது.

வசிஷ்டர் ஆகாசராஜனைப்பார்த்து "மன்ன! நான் செய்வதுபோல் சொல்வாயாக. வசிஷ்ட கோத்திரத்தில் பிறந்தவனும் யயாதியின் கொள்பேரனும், சூரசேனனின் பேரனும், வசுதேவனின் புத்திரனுமாகிய ஸ்ரீநிவாசனுக்கு எனது மகள் பத்மாவதி



திருப்பதி அலிபிரியில் ஸ்ரீ கருடாழ்வார் (30 அடி உயரம்)
திரு. ஜி. வி. ரமணராவ்.

யைப் பாணிக்கிரகணம் செய்து கொடுக்கிறேன். தேவரீர் ஏற்று அருளவேண்டும்' என்று சொன்னார்.

ஆகாசராஜன், வசிஷ்டர் மொழிந்தது போல் மொழிந்தான். இருவரையும் கை கோர்த்துச் செய்யச் சேர்த்து கன்னிகாதானம் செய்து கொடுத்தான். தேவர்கள் மலர்மாலை பொழிந்தனர்.

ஓமத் தீயிலிருந்து மைக்குழம்பை ஸ்ரீநிவாசன் தானும் தமது திருநெற்றியில் அணிந்து கொண்டு பத்மாவதியின் நெற்றியிலும் அணிவித்தார். இப்படியாக நடந்து கொண்டே வந்த வைபவம் மாங்கல்ய தாரண கட்டத்தை வந்தடைந்தது.

மங்கல வாத்தியங்கள் இனிது முழங்க விண்ணவரும் மண்ணவரும் மங்கல வாழ்த்துக்கள் கூற, மங்கையர் சுந்தரகீதம் பாட, வேத துந்துபிகள் பண்ணோசை எழுப்ப - ஸ்ரீமன் நாராயணன் திருமாங்கல்யத்தை பத்மாவதியின் கழுத்தில் கட்டினார். இருவரும் கை கோர்த்து மும்முறை அக்னியை வலம் வந்தனர். பிறகு அம்மி மிதித்து அருந்ததி பார்க்கச் செய்தார். இவ்வாறு ஒவ்வொன்றாக எல்லா நிகழ்ச்சிகளும் இனிது நடந்தேறின.

லக்ஷ்மிதேவி கரவீரபுரத்திற்கு (கோலாப்பூர்) தவம் செய்யச்சென்று விட்டாள். மகாலக்ஷ்மியின் பிரிவை எண்ணி பகவான் வருந்தினார். தேவி விலகியதால் அவரிடம் செல்வம் இல்லாது போயிற்று. திருமணச் செலவுக்குப் பட்ட கடனுக்கு வட்டி செலுத்தாததும் அவருக்கு வேதனையளித்தது. பத்மாவதி, லக்ஷ்மியை அழைத்து வரும்படி பகவானுக்கு யோசனை கூறினாள். அங்கே சென்ற பகவான் லக்ஷ்மியைக் காண முடியாது திகைத்தார். பத்ம ஸரோவரத்தில் பகவான் லக்ஷ்மிக்காகத் தவம் கிடந்தார். லக்ஷ்மிக்கு மனம் இளகி விட்டது. 'பத்மாவதி' என் அம்சம் தானே! அவள் கீழ் திருப்பதியில் இருக்கட்டும். நான் உங்களுடன் உங்கள் மார்பிலேயே தங்கி விடுகிறேன்' என்றாள்.

பகவான் லக்ஷ்மிடம் "உன்னைத் தரிசிக்க வருபவர்களுக்கு அஷ்ட ஐசுவரியமும் கொடு. அவர்கள் அதில்ஒரு பகுதியை என்னைத் தரிசிக்க வரும்போது காணிக்கையாகத் தரட்டும். அக்காணிக்கையைக் குபேரனுக்குச் செலுத்தி வருகிறேன்" என்றார். இதற்கு லக்ஷ்மி சம்மதித்தாள்.

வெங்கடேசப் பெருமாள் தன் சகோதரன் கோவிந்தராஜனிடம் குபேரனுக்கு வட்டியை அளந்துக் கொடுக்கும் பொறுப்பை ஒப்படைத்திருக்கிறார். அவர் என்ன செய்வார் பாவம். அளந்து அளந்து கொடுத்துக் களைத்துப் போய் மரக்காலையே தலைக்கு உயரமாக வைத்துக் கொண்டு படுத்து விட்டார்.

காடு மலை எங்கும் ஏராளமாகக் காணும் கறிவேப்பிலையை என்ன காரணத்தாலோ திருப்பதி மலையில் காணவே முடியாது.

அலர்மேல்மங்கை எல்லா ஸ்ரீதனத்துடன் தன் புருஷன் வீடு வந்த போது கறிவேப்பிலை கொண்டு வந்தாயா? என்று பெருமாள் கேட்டாராம். அவள் கொண்டு வரவில்லை. கருவேப்பிலைக்காக ஏழு மலைகளிலும் தேடித் திரிந்தாள். காணமல் போகவே அதே வருத்தத்துடன் திருப்பதிக்குத் தென்புறம் வந்து தங்கி விட்டாள் என்பது ஒரு கர்ண பரம்பரை கதை.

திரு. எஸ். நடராஜன் — சென்னை

# திருமலையில் பிரம்மோற்சவம்

இந்தியப் பண்பாட்டின் பழமைக்கும் பெருமைக்கும் அந்நாட்டிலுள்ள கோயில்கள் சான்றுகளாகவிளங்குகின்றன. இயற்கையின் சீற்றத்தைக் கண்டு பயந்த மக்கள், அவற்றை வழிபட ஆரம்பித்தனர். உருவம் கொடுத்து அவற்றை மழையினின்றும், வெய்யிலினின்றும் காப்பாற்ற கூரை வேய்ந்தனர். இவையே பிறகு கோயில்களாக மாறின. 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' எனும் அளவிற்கு நாட்டில் கோயில்கள் மலிந்திருந்தன. குறிப்பாகத் தென்னாட்டின் கோயில்கள் அழகிலும் கம்பீரத்திலும் ஈடு இணையற்றவை. இந்தியர்களின் வாழ்க்கையில்சமயம் ஒன்றாகக் கலந்து விட்ட ஒன்று. பொதுமக்களின் பிரச்னைகளும், சமயச் சொற்பொழிவுகளும் கோயில்களில்தான் இடம்பெற்றன;

கோயில்களில் இடம் பெற்ற தெய்வங்களுக்குப்பால், பழம் போன்ற உணவுப் பொருட்களை வைத்து வழி பட்டனர். பின்னர் அவற்றிற்குப் பூசைகளும், விழாக்களும் ஏற்படுத்தி இம்மையிலும் மறுமையிலும் பயனடைந்தனர்.

இது போலவே, கலியுகவரதனை அவ்ஏழுமலைகளில் நின்ற வண்ணம் அருள் புரியும் அவ்எல்லாம்வல்ல இறைவனுக்கும் அந்நாள் தொட்டு விழாக்கள் பல எடுத்தனர். இவ்வகையில் எடுக்கப்பட்டவிழாக்களில் மிகப் பழமையான விழா பிரம்மோற்சவமாகும். சாந்தரமானத்தைச் சார்ந்த ஆச்வயுஜ மாதத்தில் அதாவது தமிழ் மாதம் புரட்டாசி பிற்பகுதியில் நவராத்திரி விழாவின் போது இவ்விழா ஒன்பது நாட்களுக்கு நடைபெறும். மூன்றுவருடங்களுக்கு ஒருமுறை அதிகமாதம் வருவதால், அப்போது பாத்ரபத மாதத்தில் அதாவது தமிழ் ஆவணி மாதத்தின் பிற்பகுதியில் இப்பிரம்மோற்சவம் இரண்டாவதுமுறையாகவும் நடத்தப்படும். அது போது வெள்ளி ரதத்தில் இறைவன் திருவீதி வலம் வருவார்.

ஒவ்வொரு நாளும் விழாக் கோலம் கொள்ளும் திருமலை, பிரம்மோற்சவத்தின் போது பக்திப் பெருங்கடலில் மூழ்கி, கோவிந்த கோஷத்தில் தோய்ந்து வேத மந்திரங்களில் கலந்து ஹோமப் புகையில் மறைந்து தன்னை மறந்து விடும். இத்தகு பெருமையுடன் விளங்கி, எண்ணற்ற பக்தர்களைக் கவரும் திருமலையில் நடக்கும் இப்பிரம்மோற்சவத்தின் ஆதி வரலாறு என்ன என்பதைச் சற்றே நோக்குவோம்.

**புராணச் சான்று:**

வேங்கடாசல மஹாத்மியத்தின், பிரம்மன் தன் விருப்பப்படி, மற்றைய கடவுளர்கள், தேவர்கள், மனிதர்கள் முன்னிலையில் ஸ்ரீவேங்கடேஸ்வரருக்கு மிக ஆடம்பரமாக இப்பிரம்மோற்சவத்தை நடத்தியதாகக் கூறப்படுகின்றது. அவ்விழாவின் அடையாளமாகவே இவ்விழா தொடர்ந்து இன்று வரை கொண்டாடப்படுகின்றது. பிரம்மா இவ்விழாவினைச் சிறப்புற நடத்தியது பற்றிய முழுச்செய்தி, வேங்கடாசல மஹாத்மியத்தில் 19-வது அத்தியாயமான வராஹ புராணத்தில் காணக்கிடைக்கின்றது. கலியுகத்தில் ஏற்பட்டுள்ள தீமைகளை அழித்து, உலகத்தைக் காப்பாற்ற பிரம்மன், முனிவர்கள் ஆகியோரின் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்ரீநிவாசன் இவ்வேழுமலைகளில் எழுந்தருளியதாகவும் அதனால் மகிழ்ச்சி கொண்டு பிரம்மன் இவ்விழாவை நடத்தியதாகவும் தெரியவருகின்றது.

வரலாற்றுச் சான்றுகளின்படி இப்பிரம்மோற்சவத்தின் வரலாறுவதுச்

திருமலையின் கோயில், சுவர்களில் உள்ள பல கல்வெட்டுகளில் பல காலத்தால் மறைந்தும் அழிந்தும் விட்டன. கோயிலின் முதல் பிராகாரத்தின் வடக்குச் சுவரில் உள்ள ஒரு முக்கிய கல்வெட்டாவது:

"ஸ்வஸ்தஸ்ரீ கொப்பாத்ரு பன்மற்கு யாண்டு கச-வது சக்தி விடங்கநாகிய ஸ்ரீ காடபட்டிகள் பெற்க்கடையார் மகள் சாமவையாகிய காடவன் பெருந்தேவி, ஸ்ரீ வேங்கடத்து எழுந்தருளி நின்ற பெருமானடிகளுக்கு .............. கொண்டருளி வெள்ளியால் எழுந்தருளுவித்த மணவாளப் பெருமானுக்கு மார்கழி திருத்துவாதசிக்கு திருக்கொடி ஏற்றத்து திருமுளை அட்டி ஏழு நாள் திருவிழா இரண்டு பொழுதும் எழுந்தருளிவிப்பதற்கு வைத்த பூமி வெங்கடக் கொட்டத்து திருக்கட ஆர் நாட்டு திருச்சுகனூர் சபையார்க்கும் தேவர்க்கும் பொன் குடுத்து இறை இழித்தி. ...... .. சந்திராதித்த வரை செல்லதாக குடுத்தோம் சாமவையாகிய காடவன் பெருந்தேவியென்".

பல்லவ அரசைச் சார்ந்த சாமவை என்ற காடவன் பெருந்தேவி இளவரசி, இறைவனுக்கு மார்கழி மாதத்தில் ஏழு நாள் விழா எடுத்ததாகவும், மேலும் இறைவனுக்கு அவ்விழா நடத்தப் பொன்னும், பொருளும் கொடுத்தாகவும், இவ்விழா உலகில் சூரிய சந்திரர் இருக்கும் வரை நடத்தப்பட வேண்டும் என்று விரும்பியதாகவும் மேற்கண்ட குறிப்பிலிருந்து தெரிய வருகின்றது. இவ்விழாவிற்காகச் சாமவை வெள்ளியில் மலைய குன்றபெருமாள் என்ற ஸ்ரீநிவாசரின் விக்ரகத்தைச் செய்து கோயிலில் பிரதிஷ்டை செய்ததாகவும், இறைவனுக்கு விலையுயர்ந்த கல் வைத்த கிரீடமும், மாலையும் மேலும் பல பொன் ஆபரணங்களை ஈந்த

தாகவும் தெரிகின்றது. சாமவை நடத்திய இவ்விழா இரண்டாவதாகும். முதல் பிரம்மோற்சவ விழாவைப் புரட்டாசி மாதத்தில் நடத்தியதாகவும் மற்றொரு குறிப்பிலிருந்து அறிய முடிகின்றது. டாக்டர். எஸ். கிருஷ்ணசுவாமி ஐயங்கார் அவர்கள் தன்னுடைய 'திருப்பதி வரலாறு' (History of Tirupati) எனும் நூலில், சாமவையின் காலத்தைப் பல்லவ மன்னவனை தண்டிவர்மன் காலத்துடன் இணைத்து நிறுவுபதால், சாமவையின் காலம் கி. பி. 7 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது கி. பி. 8 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்றே துணியலாம்.

கி. பி. 13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுச் சான்றுகளிலிருந்து, கி. பி. 10 ஆம் நூற்றாண்டில், புரட்டாசி, மார்கழி மாதங்களில் மட்டுமின்றி, ஆடி மாதத்திலும் திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்குத் 'திருக்கோடித் திருநாள்' என்ற பெயரில் மற்றுமொரு பிரம்மோற்சவம் நடந்து வந்ததாகத் தெரிய வருகின்றது. கி. பி. 12 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீ ராமானுஜரின் உத்தரவினால், இறைவனுக்கு மற்றுமொரு பிரம்மோற்சவம் நடந்ததாக, இராமானுஜரின் பக்தரான அனந்தராயர் எழுதிய "ஸ்ரீ வேங்கடாசல இதிஹாச மாலை" எனும் நூலின் மூலம் அறிய ஏதுவாகின்றது. விஜய நகரப் பேரரச காலத்தில் இரண்டாவது ஹரிஹரர் எனும் அரசன் (1341-1404) முல்லை திருவேங்கட ஜீயர் என்பவரைக் கொண்டு, மாசி மாதத்தில் இறைவனுக்குத் திருமலையில் மற்றொரு புதிய பிரம்மோற்சவம் நடத்தியதாகச் சில சான்றுகளின் மூலம் அறிய முடிகின்றது. இவ்வாறாக கி. பி. 16 ஆம் நூற்றாண்டின் இறுதி வரை, மாதம் ஒன்றிற்கு ஒரு விழா வீதம், ஆனி, வைகாசி மாதங்களைத் தவிர்த்து, இறைவனுக்கு ஆண்டொன்றுக்குப் பத்து பிரம்மோற்சவங்கள் நடத்தப்பட்டு வந்தன என்று கூறலாம். காலப்போக்கில் மற்ற விழாக்கள் நிறுத்தப்பட்டு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் பிறந்த நாளான சிரவண தினத்தில் முடியும் புரட்டாசி மாதத்தில் மட்டும் பிரம்மோற்சவ விழா கொண்டாடப்பட்டது.

கி. பி. 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில், இப்பிரம்மோற்சவம் எவ்வாறு கொண்டாடப்பட்டது என்ற செய்தியும் சேகரிக்கப்பட்டுள்ளது. இந்தியா ஆங்கிலேயரின் ஆட்சியில் இருந்தபோது, அப்போதைய ஆந்திரப் பிரதேசசித்தூர் மாவட்ட கலெக்டர் திரு. ஜியார்ஜ் ஸ்ரேட்டான் என்பவருக்குக் கிழக்கிந்தியக் கம்பெனி, திருமலை கோயில் பற்றிய முழுச் செய்தியினைச் சேகரிக்கமாறு உத்திரவிட்டது. 1803 ஆண்டைச் சார்ந்த அக்கலெக்டரின் செய்தித் தொகுப்பான ''சவால்-ஏ-ஜவாப்'' அப்போது நடந்த பிரம்மோற்சவத்தைப்பற்றிய முழு விவரங்களை நன்கு விளக்கியுள்ளது.

ஆகவே, இப்பிரம்மோற்சவம் எப்பொழுது யாரால் முதன் முதலாக ஆரம்பிக்கப்பட்டது என்பதைப் பற்றிய அதிகாரப் பூர்வமான சான்றுகள் கிடைக்கவில்லையாயினும், இவ்விழா பன்னெடுங்காலமாகக் கொண்டாடப்பட்டுச் சுமார் 10 நூற்றாண்டுகளாக, பக்தர்களை வெகுவாகக் கவந்து வருகின்றது என்பது தெளிந்த உண்மை.

இப்பிரம்மோற்சவம்பத்துநாட்கள் கொண்டாடப்பட்டாலும், முதல் நாள் அவ்வளவாக, எவ்விதச் சிறப்புமின்றிக் கடந்து விடும். முதல்நாள் அங்குரார்ப்பணம் நாள் என்று அழைக்கப்படும். அன்றுமாலை விஷ்வக் சேனர் என்று அழைக்கப்படும் சேனை முதலியார் எழுந்தருளச் செய்வார். யாகசாலைக்கான புனித இடத்தைத் தேர்ந்தெடுக்க அன்று அவர் திருமலையின் நான்கு வீதிகளில் எழுந்தருளுவார். அவ்விடத்தில் ஒவ்வொரு நாளுக்குரிய ஹோமம் ஆரம்பிக்கப்படும். விழாவிற்குரிய எல்லா ஏற்பாடுகளையும் அவர் மேற்பார்வையிட்டு, அடுத்தநாள் ஆரம்பமாகும் விழாவிற்குள்ளாக் கடவுளர்களையும் அழைப்பார். திருமலைராய மண்டபத்தில் அளிக்கப்படும் மரியாதையை

ற்றுக் கொண்டபின், அவர் அநந் ாழ்வார், கருடாழ்வார், சுதர்ஸனர் ஆகியோருடன் யாகசாலைக்குச் செல் ார்.

அடுத்தநாள் முதற்கொண்டு அடிப் டை விழா ஆரம்பமாகும். இதைக் றிக்கும் வகையில் தூய ஆடையில் விய நுணுக்கங்களுடன கருடனின் உருவம் தீட்டப்பட்ட கருடத்துவஜம் எனும் கொடி இறைவனின் கொடி மரத்தில் ஏற்றப்படும். இதுபோது விலையுயர்ந்த பொன்னுபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு, வஜ்ரகவசம் மலர்மாலைகள் அணியப்பெற்ற இறை வனின் உற்சவமூர்த்தியான ஸ்ரீமலை யப்ப, சுவாமி தன் இரு தேவி யர்களான ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோருடன் தங்கத் திருச்சியில் (வாகனம்) திருமலைராய மண்டபத் திற்கு எழுந்தருளுவார். குறிப்பிட்ட ன் முகூர்த்தத்தில், வேதங்கள் முழங்க, நாதஸ்வர இன்னிசை எங் கும் பரவத் தலைமை அர்ச்சகரால் கருடத்வஜ கொடி, கொடி மரத்தில் ஏற்றப்பட்டு, ஆகம விதிப்படி, அக் கொடி மரத்தில் சுற்றப்படும். இவ் விழா நன்முறையில் நடக்க, தெய்வீ கச் சிந்தனைக்கு எவ்வித இழுக்கும் நேராவண்ணம் பாதுகாக்க எட்டுத் திக்குப் பாலகர்களுக்கும் உத்திர விடப்படும். இவ்வாறு ஆரம்பிக்கப் படும் இவ்வொன்பது நாள் விழா வின் போது, இறைவன் பல்வேறு வாகனங்களில் காலையிலும், மாலை யிலும் திருவீதி வலம் வருவார். இன்னின்ன நாட்களில் இந்தந்த வாகனங்களில் இறைவன் எழுந்தரு ளுவார் என்பதற்கு எவ்விதமான ஆகம விதிகளோ அல்லது வரை யறைகளோ இல்லை. இப்போது உள்ள வாகன முறைகள், அவ்வப் போது வந்த அடியார்களின் விருப்பு டன் செய்த ஏற்பாடுகளைப் பொறுத்தே வழக்கில் இருந்து வரு கின்றன. பிரம்மோற்சவத்துடன் இணைந்த மற்றுமொரு குறிப்பிட்ட நிகழ்ச்சியும் கல்வெட்டுகளில் காணப்படுகின்றது. விழாச் செய்தி யினை எங்கும் தெரிவிக்கும் வகையில், கோயில்முன் அதிர் வெடிகளை வெடிக்கும் பழக்கம் இருந்து வந்த தாகத் தெரிய வருகின்றது. கி.பி. 1583 ஆம் ஆண்டைச் சார்ந்த ஒரு கல்வெட்டின் மூலம் எட்டூர் திருமலை நம்பி குமாரதாதநாச்சாரியார் என் பவர் 20 ரேகை பொன் செலவில் பெறுபியாணம் என்ற ஒரு வெடியை நன்கொடையாகக் கொடுத்த தாகத் தெரிய வருகின்றது. ஆனால் 'அதிர்வெடி' என்று எங்கும் குறிக் கப்பட வில்லையாயினும் போர்ச்சுகீ சியர், டச்சுக்காரர்கள், பிரஞ்சு நாட்டினர், ஆங்கிலேயர் ஆகியோர் இந்தியாவுக்கு வந்த பிறகுதான் இத் தகு வெடிகள் தென்னிந்தியாவில் வழக்கில் பரவலாக இருந்து வந்தது.

இவ்விழாவை பிரம்மா ஆரம் பித்து வைத்ததாகப் புராணங்கள் செப்புவதால், அதன் அடையாள மாக, ஒவ்வொரு நாளின் வாகன உற்சவங்களின்போதும் பிரம்மரதம் எனும் ஒரு சிறு ரதம் (வெற்று ரதம்) வாகனங்களின் முன் இழுத் துச் செல்லப்படும். இதனுடைய மற் றொருப் பின்னணி என்னவெனின், இவ்விழாவின்போது பிரம்மன் திரு மலையில் தங்கி, விழா நன்முறையில் நடக்க அவர் மேற்பார்வை புரிவ தாகப் பொருள்படும். முதல்நாள் இரவின்போது மலையப்பசுவாமி தன் இரு தேவியருடன் ஏழு தலைகளைக் கொண்ட பெரிய சேஷ வாகனத்தில் திருவலம் புரிவார். இரண்டாம் நாள் காலையில் நடத்தப்படும் சிறிய சேஷ வாகனத்தில் மலையப்ப சுவாமி மட்டும் எழுந் தருளுவார். அன்று இரவு இறை வன், அன்ன வாகனமான ஹம்ஸ வாகனத்தில் திருவீதி வலம் வரு வார். அன்று இறைவனை வழிபட் டால் அவர்களுடைய ஹிம்சைகள் (துன்பங்கள்) மறைந்து விடுமென்று நம்பப்படுகின்றது. அன்று இறை வன் சரஸ்வதி அவதாரம் புனைவார். மூன்றாம் நாள் காலை இறைவன் சிம்ஹ வாகனத்திலும், இரவில் முத் துக்களால் அலங்கரிக்கப்பட்ட முத் துப் பந்தலிலும் வலம் வருவார்.

மனிதர்களின் துன்பங்களைப் போக்கி, முழுவதுமாகத் தன்னைச் சரணடைந்தார்க்கு அருள் புரிய, இவ்வேழுமலைகளில், தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி எழுந்தருளி யுள்ளான். இதனைக் குறிக்கும் வகை யில் நான்காம் நாள் காலை, கேட்டதைக் கொடுக்கும் கல்பக விருக்ஷம் வாகனத்தில் திருவீதி வலம் வருவார். அன்று இரவு தங்கத் தகடுகளால் வேயப்பட்ட சரிகை வேலைப்பாடுடைய பட்டுத் துணியைப் புடவையாகக் கொண்டு, சந்திரக்கல் பதித்த கிரீடத்தை அணிந்து, மேலும் வைரக்கல் பதித்த புல்லாக்கு என்ற மூக்குத்தியை அணி வார். காதுகளில் வைரத்தோடுகள் மின்ன, சங்கு, சக்கரம் ஏந்திய கை களில் பொன் தாமரை மொட்டுக் கள் விளங்கும். இத்திருக் கோலத்தில் 'அவன்' ஆகிய இறைவன் 'அவள்' ஆக மாறி, முந்தி ஒரு நாள் தேவர் களுக்கு அமிர்தம் வழங்க, மோஹினி அவதாரத்தில் தோன்றிய இறைவ னின் அழகிய கோலத்தில் மயங்கிய அரக்கர்களைப் போன்று, பெண் வேடம் புனைந்த இறைவனின் அலங் காரக் கவர்ச்சியில் பக்தர்கள் தங்களை மறந்து தெய்வ சிந்தனையில் தோய் வர் எனக்கூறின் அது மிகையாகாது. பிரம்மோற்சவ விழாவிற்கு மேலும் சிறப்புச் சேர்க்கும் வகையில், அன்று இரவு இறைவன், தனக்குப் பிடித்த கருடவாகனத்தில் திருவீதிவலம் வருவார். அதுபோது திருமலை பக்திக் கோலம் பூண்டு, மக்கட் கடலாக விளங்கும். மொழி, இன வேறுபாடு இன்றி, மக்கள் அனைவரும் ஒன்று கலந்து, பக்தியின் விளிம்பிற்கே சென்று விடுவர். அன்று இரவு [illegible] பூமாலைகளால் வாகனத் தை அலங்கரிப்பர். பிரம்மோற்சவத் தின் ஐந்தாம் நாள் மிகவும் சிறப் பானதாகவும் முக்கியமானதாகவும் கருதப்படும். முதல்நாள் இரவின் போதே, திருமலையில் யாத்திரிகளின்

கூட்டம் பெருகி விளங்கும். ஐந்தாம் நாள் காலை மலையப்பசுவாமி மோஹினி அவதாரம் புனைவார். இந்த ஒரு நிகழ்ச்சியின் போதுதான், இறைவனின் நின்ற வண்ணம் அருள் புரியும் திருக்கோலம் மாற்றப்படும். பெண்களுக்குரிய ஆபரணங்களை அணிந்து கொண்டு இதுவரை வரத ஹஸ்தமாக விளங்கிய தன் வலது கரத்தினை அபய ஹஸ்தமாக மாற்றிப் பக்தர்களுக்கு அருள்புரிவார். பொன் கருட வாகனத்தில் அமரும் மலையப்ப சுவாமி, அன்று மட்டும் அரிதாகப் பயன்படுத்தப்படும் லக்ஷ்மீஹாரம், மகர கண்டிகை என்னும் விலையுயர்ந்த ஆபரணங்களை அணிவார். மேற்கூறிய ஆபரணங்கள், பிரம்மோற்சவத்தின் கருட சேவையன்று தான் கோயில் கர்ப்பக் கிரகத்திலிருந்து வெளிக் கொணரப்படும். அப்போது, சென்னையிலிருந்து கால் நடையாக பக்தர்களால் திருமலைக்குக் கொண்டு வரப்பட்ட 'திருப்பதி குடைகள்' உற்சவர்க்கு அணி செய்யும். அன்று அவ்வணிகளை மூலவரின் திருமேனியினின்று மிகவும் பயபக்தியுடன் கழற்றித் தங்கத்தட்டுகளில் வைத்து, மலையப்ப சுவாமியின் மற்றைய அலங்காரங்கள் முடிந்த பிறகு, இன்னிசைத் தொடர அவற்றை வாகன மண்டபத்திற்குக் கொண்டு வருவர். இவ்வாறு அவ்வரிதான அணிகலன்களை அணிந்து, அருள்பொழியும் இறைவனை அன்று தரிசிப்பவர்கள் பேறு பெற்றவர்கள் தாம்.

அன்று இரவு இறைவன் கோயிலுக்குத் திரும்புவதற்குள் பொழுது புலர்ந்துவிடும். விரைவான சமயச் சடங்குகளுக்குப் பிறகு, அன்று காலை (ஆறுவது நாள்) இறைவன் சிறிய திருவடியில் அதாவது ஹனுமந்த வாகனத்தில் எழுந்தருளுவார். அன்று மதியம் இறைவன் தன் இரு தேவியருடன் மேற்குமாட வீதியில் உள்ள வசந்த உற்சவ மண்டபத்திற்கு எழுந்தருளுவார். அங்கு அவருக்கு மணமிக்க நீரினால் திருமஞ்சனம் அல்லது அபிஷேகம் நடைபெறும். மாலை கோயிலுக்குத் திரும்பிய பின், அன்று இரவு இறைவன் யானை வாகனத்தை அலங்கரிப்பார்.

அடுத்த நாளான ஏழாவது நாளன்று, சூரிய சந்திர மண்டலங்களில் இறைவன் தங்கியிருப்பதாகக் கூறப்படுவதால், அதன் அடையாளமாக அன்று காலையிலும் இரவிலும் முறையே சூரிய, சந்திரப் பிரபைகளில் அவர் திருவீதி வலம் வருவார். திருமலையிலுள்ள சூர்யப் பிரபை வாகனம் தென்னிந்தியாவிலேயே மிகப் பெரியது என்று கூறப்படுகிறது. ஒளி விடும் வஜ்ர கவசத்துடன், தலையில் பெரிய விலையுயர்ந்த கல் பதித்த கொண்டை அணிந்த இறைவனின் திருவுருவம் காண்போர் மனதை வெகுவாகக் கவரும்.

எட்டாம் நாளன்று இறைவன் தன் தேவியருடன் குறிப்பிட்ட நன்முகூர்த்தத்தில் வேதங்கள் முழங்க, மங்கள வாத்தியம் ஒலிக்க நன்கு அலங்கரிக்கப்பட்ட தேரில் அழகிய திருக்கோலத்துடன் எழுந்தருளுவார். நன்கு தூய்மையாக்கப்பட்ட கோயிலைச் சுற்றிய அகன்ற மாட வீதிகளில் தேரானது பக்தர்களால் இழுக்கப்பட்டு, குறித்த நேரத்தில் தேரடியைச் சேரும். அன்று மாலை வரை இறைவன் தேரில் வீற்றிருந்து பக்தர்களுக்குக் காட்சி வழங்குவார். அன்று இரவு இறைவன் குதிரை வாகனத்தில் எழுந்தருளுவார்.

ஒன்பதாவது நாள் அவப்ருத உற்சவம் (தீர்த்தவாரி) நடைபெறும். இதுதான் கடைசி உற்சவம். உபய நாச்சிமார்களுடன் ஊர்வலமாக ஸ்வாமி புஷ்கரிணியின் அருகில் உள்ள ஆதிவராஹ ஸ்வாமி ஸன்னிதியை அடைவார். அங்குப் பண்டி



திருமலை உண்டியலில் காணிக்கையாகச் செலுத்தப்படும் நாணயங்களைப் பிரித்திடும் புதிய இயந்திரம்.

தர்களால் இப்பத்து நாள் பிரம்மோற்சவத்தின் போது, இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் ஆதரவில் புராண, சங்கீத உபன்யாஸங்களும், நாமசங்கீர்த்தனைகளும் நடைபெறும்.

உற்சவங்கள் எல்லாவற்றிலும் பிரம்மோற்சவம் அதி முக்கியமாகவும், ஈடுஇணையற்றதாகவும் கருதப்படுகிறது. ஏனெனில் எந்த உற்சவத்திலும் அவ்வளவு மக்கள் ஒரே சமயத்தில் கூடி பகவானின் அருளைப் பெறுவதையும், இவ்வளவு விசேஷங்களை ஒரே சமயத்தில் கண்டு களிப்பதையும் காண முடியாது. ஐஹிக சுகங்களுக்கு ஆளாகி, மமகார அசூயைகளுடன் நிறைந்த நம் உள்ளத்தைப் பெருமானின் தரிசன குணகீர்த்தனங்களால் சுத்தப்படுத்தி நல் வழிக்குத் திருப்பி மறு பிறவி இல்லாமல் செய்வதே இவ்வித உற்சவங்களின் குறிக்கோள். நம்மிடம் உள்ள ஜோதி நம்மைப் பிரிந்திருந்தாலும், க்ஷணிக சுகத்திலிருந்து நம்மை விடுவித்து மக்களுக்கு நிலையான ஆனந்தத்தை விளைவிக்கும் எம்பெருமானாகிய ஜோதி என்றும் மாறாததாகும்; அணையாததும் ஆகும்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI 517501

